விலை அணா 12.] [ஸஞ்சிகை—4.





॥ ஸ்ரீ: ॥

॥ ஸ்ரீமதே லக்ஷ்மீஹயவதன பரப்ரஹ்மணே நம: ॥
॥ ஸ்ரீமதே வகுலாபரண மஹாகுரவே நம: ॥
॥ ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ॥
॥ ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம: ॥

---

ஸ்ரீமந்நிகமாந்த மஹா தேஶிகனருளிச் செய்த
ஸர்வ வேதாந்த தாத்பர்ய ஸங்க்ரஹமான

ஸ்ரீமத்

# ரஹஸ்யத்ரய ஸாரம்.

இது
ஸகலரும் அறிந்து உஜ்ஜீவிக்கவேண்டியதற்காக
எளிதான தமிழ் நடையில்
திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான் பகவத்விஷயம்
ஸ்ரீ உ.ப. வே. நரஸிம்மாசார்யார் ஸ்வாமிகளினுல்
எழுதப்பட்ட வ்யாக்யானத்துடன்

சென்னை, கோமளேசுவரன்பேட்டை,
ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார ப்ரசாரண ஸபையாரால்
ப்ரசுரம் செய்யப்பட்டது.



1919.

முக்தரைப்போலே கிஞ்சித்காரனாய்க்கொண்டு முக்தப்ராயனாய் உபாய பூர்த்தியாலே க்ருதக்ருத்யனென்றும் புருஷார்த்த பூர்த்தியாலே க்ருதார்த்தனென்றும் சாஸ்த்ரங்களாலும் தந்நிஷ்டராலுங் கொண்டாடப்பட்டிருக்கும்.

கத்யவாக்யோதாஹரணம்.

இவனுடைய இந்த க்ருதக்ருத்யாநுஸந்தாநத்தை 1 'அதஸ்த்வம் தவ தத்த்வதோ மஜ்ஜ்ஞாந தர்சந ப்ராப்திஷு நிஸ்ஸம்சய: ஸுகமாஸ்ஸ்வ'

தத் தாத்பர்யம்.

என்று சரணாகதி கத்யத்திலே நிகமித்தருளினார். இதுக்குக் கருத்து—

---

தைக் கொண்டு பகவதபிப்ராயத்தை அறிகிறான் என்று தாத்பர்யம். 'கிஞ்சித்' இத்யாதிக்குப் பகவானுக்குக் கிஞ்சித்காரம் செய்யும் விஷயத்தில் முக்தர்களுக்கு ஸமானம் என்று தாத்பர்யம். புருஷார்த்த பூர்த்தியாலே - கைங்கர்யம் பூர்ணமாய்க் கிடைப்பதினாலே, 'சாஸ்த்ரங்களாலும்' என்பதற்கு 'ஸமித்ஸாதநகாதீநாம் யஜ்ஞாநாம் ந்யாஸமாத்மந: | நமஸா யோऽகரோத்தேவே ஸ ஸ்வத்வர உதீரித: ||' (ஸமித் முதலியவைகளைக் கொண்டு செய்கிற யஜ்ஞங்களுக்குள் பகவானிடத்தில் ஆத்ம ஸமர்ப்பணமாகிற யஜ்ஞத்தைச் செய்தவன் நல்ல யஜ்ஞத்தைச் செய்தவன் என்று சொல்லப்பட்டான்)' என்றிவை முதலியவைகளாலும் என்றர்த்தம். தந்நிஷ்டராலும்-அந்த சாஸ்திரத்தில் நிஷ்டையையுடைய பூர்வாசார்யர்களாலும். 'செய்த வேள்வியர்' இத்யாதிகளிற்படியே 'கொண்டாடப்பட்டிருக்கும்' என்று தாத்பர்யம். இந்த க்ருத க்ருத்யத்வம் பல ரூபம் என்பதற்கும் இது அவஶ்யம் அநுஸந்தேயம் என்பதற்கும் ப்ரமாணம் காட்டியருளுகிறார்—'இவனுடைய' என்றாரம்பித்து. அத: - ஆகையினால், த்வம் - நீ, தவ - உனக்கு, தத்த்வத:-உண்மையாக, மஜ்ஜ்ஞாந - என்னை அறிவது, தர்சந-பார்ப்பது, ப்ராப்திஷு-அடைவது, இவைகளில், நிஸ்ஸம்சய: - ஸந்தேஹமில்லாதவனாய், ஸுகம்-ஸுகமாக, ஆஸ்ஸ்வ - இரு. 'நிகமித்தருளினார்' என்பதற்கு பல பர்வங்களை அருளிச் செய்யுமிடத்தில் இந்த க்ருத க்ருத்யாநுஸந்தானத்தைச்சேர்த்தருளிச் செய்திருக்கிறாரென்று

---

1 ச-க.

**அநாதிகால** மாஜ்ஞாதிலங்கநமடியாக வுண்டான **பகவந்நிக்ரஹ**த்தாலே **ஸம்ஸரி**த்துப்போந்த நமக்கு **அவஸர ப்ரதீக்ஷை**யான **பகவத்க்ருபை**யடியாக வுண்டான **ஸதாசார்ய கடாக்ஷ விஷயீகார**த்தாலே வந்த **உச்சாரணாநூச்சாரண**த்தாலே **ப்ரபத்த்யநுஷ்டாநம்** பிறந்த பின்பு **ஶரண்ய ப்ரஸாதநங்**களி லிதுக்கு மேலொன்றில்லாமையாலே **நிக்ரஹ ஹேதுக்**களை யெல்லாம் க்ஷமித்துத் தீர்ந்தவடியவர் தம்மைத் திருத்திப்பணிகொள்ள வல்ல **ஸர்வஶேஷி**யான **ஶ்ரிய:பதி** தன் பேருகத் தானே **ரக்ஷி**க்குமென்று

---

தாத்பர்யம். இவ்விடத்தில் ஆஸ்திகனு யிருப்பவனுக்கு ஶாஸ்திரார்த்தத்தில் ஸம்ஶயம் உண்டாகாதாகையினாலே '**நிஸ்ஸம்ஶய:**' என்று ஸம்ஶயத்தை நிஷேதிப்பது நிஷ்ப்ரயோஜனமாகையினால் இதன் தாத்பர்யத்தை அருளிச் செய்கிறார்— 'இதுக்கு' என்றாரம்பித்து. '**அவஸர ப்ரதீக்ஷையான**' என்பதற்கு பகவானுடைய ஸஹஜ காருண்யம் நம்மை ரக்ஷிப்பதற்கு ஸமயம் பார்த்துக்கொண்டிருந்தது, யாத்ருச்சிக ஸுக்ருதாதி பரிபாககாலம் வந்தவாறே நம்மை விஷயீகரித்தது என்று தாத்பர்யம். **விஷயீகாரத்தாலே** - அவர்கள் அங்கீகரித்ததினாலே. **உச்சாரணாநூச்சாரணத்தாலே** - ஆசார்யன் த்வய மந்திரத்தை உபதேஶிக்க அதைப் பகவத் ஸந்நிதியில் அநுவாதம் செய்துகொண்டு ப்ரார்த்தித்தபடியினாலே. **தீர்ந்த** - தன்னையே உபாயமாக நிஸ்சயித்து ஆஶ்ரயித்த, **அடியவர்** - தாஸர்களை, **திருத்தி** - பாபங்களை யெல்லாம் போக்குவதினாலே பரிஶுத்தர்களாக்கி, **பணிகோள்ளவல்ல** - (அவர்களைக் கொண்டு) கைங்கர்யங்களை அங்கீகரிக்க ஶக்தியுடையவனான. **தன்பேருக** - தன் ப்ரயோஜனமாக, **தேறி** - விஸ்வாஸத்தையடைந்து. '**நிஸ்ஸம்ஶய:**' என்பதற்கு இங்கு ஸம்ஶய நிவ்ருத்தியைச் சொன்னது அதின் கார்யமான மஹாவிஸ்வாஸத்தைச் சொல்லி அத்துடன்சேர்ந்ததான நிர்ப்பரத்வத்தைச் சொல்லியிருக்கிறது என்று தாத்பர்யம். இப்படி **ஸ்ரீ**பாஷ்யகாரர் பகவானுடைய வாக்யமாக

தேறி நிஷ்பந்நனுயிரு—வென்கை. இது 'ஶாஶுசஃ' என்கிற ஶரண்ய வாக்யத்திலுந் தீர்ந்தபொருள்.

க்ருதக்ருத்யனுடைய லக்ஷணம்.

இவனுக்கு ப்ரபத்திக்கு முன்புற்ற ஶோகமயிகாரத் திலேசொருகுகையாலேமுன்பு ஶோகித்திலனுகில் அதி காரி யல்லாமையாலே 'காரணாபாவாச் கார்யாபாவ:' என்கிற ந்யாயத்தாலே உபாய நிஷ்பத்தி யுண்டா காது. உபாயஸ்வீகாரம் பண்ணினுனுகத் தன்னை நினைத்திருந்த பின்பு ஶரணாகதியிலே நெகிழ்ச்சி யுடையனுய் ஶோகித்தானுகில் 'கார்யாபாவாச் ஸர்வ காரணாபாவ:' என்கிற ந்யாயத்தாலே பரிபூர்ணோபாய

அருளிச் செய்ததற்கு மூலத்தை யருளிச் செய்கிறூர்—'இது' என்றூரம்பித்து. தீர்ந்த பொருள்-நிஷ்கர்ஷிக்கப்பட்ட அர்த்தம். இதில் 'ஶாஶுசஃ' என்று பொதுவாகத் துக்கத்தை நிஷேதித் திருப்பதினுல் ப்ரபத்திக்கு முன்பும் ஶோகம் கூடாது என்று தோன்றுகிறபடியினுல் அகிஞ்சனனுப் ஶோகத்தை யுடையவன் ப்ரபத்தியில் அதிகாரி என்பதுடன் விரோதி யாதோ? என்ன வருளிச் செய்கிறூர்—'இவனுக்கு' என்றூரம்பித்து. இங்கு 'ஶாஶுசஃ' என்பதினுலேயே இதற்குமுன் ஶோகித்திருந்தான் என்றேற்படுகிறபடியினுல் ஶோகித்தவனே அதிகாரி என்று தாத்பர்யம். காரணாபாவாச் - காரண மில்லாமையினுல், கார்யாபாவ: - கார்யமுமில்லை, அதாவது இவ்விடத்தில் இவ னுக்கு ப்ரபத்தியில் அதிகாரமில்லாமையினுல் ப்ரபத்தி பூர்ண மாகவில்லை என்று தாத்பர்யம். நிஷ்பத்தி - பலத்தைக் கொடுக்கக் கூடிய பூர்த்தி. ஸ்வீகாரம் - அனுஷ்டானம். நெகிழ்ச்சி - ஸந்தே ஹம், அல்லது அவநம்பிக்கை. 'தன்னை நினைத்திருந்தபின்பு' இத்யா திக்கு இவனுக்கு மஹா விஸ்வாஸமில்லாமையாலே உபாயம் ஸரி யாக அனுஷ்டிக்கப்படவில்லை என்று தாத்பர்யம். கார்யாபா வாச் - கார்யமுண்டாகாமையினுல், ஸர்வகாரணாபாவ: - எல் லாக் காரணங்களுமில்லை (என்று தெரிந்துகொள்ளப்படுகிறது). பரிபூர்ணோபாய னல்லாமையாலே-பூர்ணமாக அனுஷ்டிக்கப் பட்ட உபாயத்தையுடையவனல்லாமையால், அதாவதுப்ரபத்திக்

னல்லாமையாலே ஸஹோபாயவ்ருத்தி ஸாபேக்ஷமாய்க் கொண்டு விளம்பிக்கு மென்றறியலாம். முன்பு ஸஶோகனாய்ப் பின்பு 'மா ஶுச:' என்று ப்ரதிஷேதிக்கிறபடியே வீதஶோகனானவன் க்ருதக்ருத்யனென்றறியலாம்.

மன்னவர் விண்ணவர் வானே
    ரிறையொன்றும் வான் கருத்தோர்
அன்னவர் வேள்வி யனைத்து
    முடித்தன ரன்புடையார்க்
கென்ன வரந் தர வென்று
    நம்மத்திகிரித் திருமால்
முன்னம் வருந்தி யடைக்கலங்
    கொண்ட நம் முக்கியரே. 20

---

குப் பிறகு ஶோகம் பிறந்ததாகில் நிஸ்ஸம்ஶயத்வமில்லை, நிஸ்ஸம்ஶயத்வமில்லாமையினால் அதற்குக்காரணமான மஹாவிஸ்வாஸம் இல்லை என்று ஊஹிக்கப்படுகிறபடியினாலே மஹா விஸ்வாஸமாகிற அங்கம் குறைந்தபடியினால் உபாயம் பூர்த்தியாகவில்லை என்று தாத்பர்யம். 'நெகிழ்ச்சி யுடையானாய் **ஶோகித்தானாகில்**' என்பதினால் வ்யாதி முதலிய மற்றக்காரணங்களினால் உண்டாகிய ஶோகம் பூர்ணோபாயனல்லாமைக்குக் காரணமில்லை என்பது த்யோதிதம். '**உபாயவ்ருத்தி**' யாவது மஹா விஸ்வாஸம் பூர்ணமாக உண்டாவது. அது உண்டாகும்வரையில் பலம் தாமதிக்கும், இத்தால் முன் பண்ணிய ப்ரபத்தி நிஷ்பலமாகாது என்பது த்யோதிதம். **ஸஶோகனாய்** - ஶோகத்தை உடையவனாய், **ப்ரதிஷேதிக்கிறபடியே** - மறுக்கிறவிதமாக, **வீதஶோகன்** - துக்கமில்லாதவன்.

இப்படி இவ்வுபாய நிஷ்டன் எல்லோராலும் ஸ்தோத்திரம் செய்யப்படுவான் என்றருளிச் செய்து அப்படி ஸ்தோத்திரம் செய்யும் ப்ரகாரத்தை ஒரு பாட்டாலே ஸங்க்ரஹித்தருளுகிறார்—'மன்னவர்' என்றாரம்பித்து.

ப - ரை] **அன்புடையார்க்கு** - தன்னிடத்தில் விஸ்வாஸ முடைய வர்களுக்கு, **என்ன வரந்தர** - எந்தவரத்தை நாம் தரக்கடவோம், **என்று**-என்று த்ருப்தி யடையாதவனுன, அதாவது அவர்களின் அநுபந்திபர்யந்தமாக மோக்ஷத்தைக் கொடுத்தும் ஒன்றும் செய்யாதவனைப்போல இன்னும் எதைக்கொடுப்போம் என்று எண்ணிக் கொண்டிருக்கிற என்று தாத்பர்யம், அன்றிக்கே இந்தத் தேஹத்துடன் இருக்கும்பொழுது மஹிமைகளையும், க்ருதக்ருத்யத்வாநுஸந்தானம், நைர்பர்யம், முதலியவைகளையும் கொடுத்து இன்னும் எதைச் செய்வோம் என்று நினைத்துக் கொண்டிருப்பவனுன என்று தாத்பர்யமாகவுமாம், இங்கு 'உன்னடியார்க்கு என்செய்வனென்றே இருத்திநீ' இத்யாதி அநுஸந்தேயம், **நம்** - நம்முடைய ஸ்வாமியான, **அத்திகிரித் திருமால்** - ஹஸ்திகிரியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரிய:பதியான பகவான், 'நம்' என்பதினுல் ப்ரதமாப்த பூர்த்தியன்றே மாதாபிதாக்கள் இவரை ஸந்நிதிக்கு அழைத்துக்கொண்டுபோய் திருவடித் தொழுது நிற்கையில் நம் இராமானுஜ ஸித்தாந்தத்தை வளர்க்கக்கடவீர் என்று விசேஷ கடாக்ஷம்பண்ணி அருளிப்பாடிட்ட வ்ருத்தாந்தம் அநுஸந்திக்கப்பட்டதாகிறது, **முன்னம்**-முன்பே, ஜாயமான தசையிலேயே என்றபடி, **வருந்தி** - ப்ரயாஸப்பட்டு, அதாவது நம்மை உஜ்ஜீவிக்கச் செய்யவேண்டுமென்று கரண களேபர ப்ரதானம் முதலான பரந்யாஸ பர்யந்தமாக ப்ரயாஸப் பட்டு, **அடைக்கலம் கொண்ட** - ரக்ஷ்யவஸ்துவாக அங்கீகரித்த, **நம்முக்கியர்** - நமக்கு அஸாதாரண ஸ்வாமிகளான ப்ரதானர்கள், **மன்னவர்** - ராஜாக்கள், **விண்ணவர்** - தேவதைகள், **வானோர்** - நித்யஸூரிகளுக்கு, **இறை** - ஸ்வாமியான ஸர்வேஸ்வரன், **ஒன்றும்** - எப்பொழுதும் வஸிக்கிற, **வான்** - பரமபதத்தில், **கருத்தோர்** - ஆசையுடையவர்கள், **அன்னவர்**-ஹம்ஸத்தைப் போன்றவர், **வேள்வி யனைத்தும்** - யஜ்ஞங்கள் எல்லாவற்றையும், **முடித்தனர்** - செய்து முடித்தவர்கள்.

'அன்பு' என்பது மஹா விஸ்வாஸத்தைச் சொல்லி அத்துடன் ப்ரபத்தி செய்தவர்களைக் குறிக்கிறது. அன்றிக்கே 'பத்துடையடியவர்க்கெளியவன்' என்கிறபடியே ஆசையைமாத்திரம் குறிக்கிறதாகவுமாம். கேவலம் ஆசையை மாத்திரமுடை

யவர்களுக்கு அனுக்ரஹத்தைச் செய்பவன் பக்தியுடையவர்களுக்கு அனுக்ரஹிப்பான் என்பது கைமுதிக ந்யாய ஸித்தமல்லவா? இப்படி இருக்கைக்குக் காரணம் பிராட்டியினிடத்தில் ப்ரீதியுடையவனாயிருக்கை என்பது 'திருமால்' என்பதினால் த்யோதிதம். அதாவது '[illegible]' என்னும்படி நிற்கிற பிராட்டியுடன் சேர்த்தியாலே இவனும் அன்புடையார்க்கு என்னவரந்தர என்றிருக்கிறான் என்று தாத்பர்யம். 'நம்' என்பதற்கு இப்படி மஹா விஸ்வாஸத்துடன் ப்ரபத்தி பண்ணினவர்கள் '[illegible]' என்கிறபடியே நமக்கு யஜமானர்கள் என்று தாத்பர்யம். 'முக்கியர்' என்பதற்கு கௌணோபாய நிஷ்டர்களாயிருந்தபோதிலும் '[illegible]' இத்யாதிகளிற்படியே ஸ்தோத்திரம் செய்யத்தகுந்தவர்களில் இவர்களே ப்ரதானர்கள் என்று தாத்பர்யம். 'ஏ' காரத்தினால் இதரர்கள் இப்படிப்பட்டவர்களல்ல என்பது த்யோதிதம். 'மன்னவர்' என்பதற்கு '[illegible]', 'எம்மைபாளும் பரமரே' என்கிறபடி நம்மை ஆளக்கூடியவர்கள் என்று தாத்பர்யம், அன்றிக்கே தேவரிஷி பித்ருக்களுக்குப் பரதந்திரர்களல்லவென்று தாத்பர்யமாகவுமாம். விண்ணவர் - தேவதைகள், அதாவது நமக்கு ஆராத்யர்கள் என்று தாத்பர்யம். இவ்விடத்தில் 'எம் தொழுகுலந் தாங்களே' என்பது விவக்ஷிதம். 'வானோரிறை' இத்யாதிக்கு இவர்களே முமுக்ஷுக்களில் முக்யமானவர்கள் என்று தாத்பர்யம். அன்றிக்கே பகவான் இவர்கள் திருவுள்ளத்திலேயே எப்பொழுதும் வஸிக்கும்படியானவர்கள் என்றர்த்தமாகவுமாம். '[illegible]' இத்யாதிகளிற்படியே பகவான் இவர்களுடைய திருவுள்ளத்திலேயே எப்பொழுதும் நித்யவாஸம் பண்ணுகிறான் என்று தாத்பர்யம். 'வானோரிறையேனும்' என்று பாடாந்தரம். அப்பொழுது இவர்களே பகவான் என்று '[illegible]' என்கிற இடத்தில் போலே ஸ்திதுத்திருக்கிறது என்று தாத்பர்யம். விண்ணவர் - ஸாதாரண தேவ

स भवति सारल पारं गत्वा
संन्यसनं कृतम्
परिहृत सर्वव्यापारेत्य कृत्यं
प्रहीण अकृत्यवत् ।
भवति च पर प्रवृत्तिः
[illegible]
[illegible]
[illegible] ॥

इति श्रीकवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य वेदान्ताचार्यस्य कृतिषु
श्रीमद्रहस्यत्रयसारे
कृतकृत्याधिकारष्षोडशः.

---

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

சீரார் தூப்புற்றிருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணம்.

---

தைகள், வானோர் - நித்யஸூரிகள், இறை - காணிக்கை, என - என்று சொல்லும்படி, வான் கருத்தோர் - முமுக்ஷுக்கள், அதாவது ஸாதாரண தேவதைகளும் நித்யஸூரிகளும் உபஹாரம் கொண்டுவந்து ஸமர்ப்பிக்கும் படியானவர்கள் என்று தாத்பர்யம். ‘எல்லாத் தேவதைகளும் இவனுக்கு காணிக்கை ஸமர்ப்பிக்கிறார்கள்’ என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்கியம் முதலியவைகள் விவக்ஷிதம். ஸாதாரண தேவதைகளுக்கு இவர்கள் பாதந்த்ரர்களாயிருக்கை நீங்கினது மாத்திரமல்ல அவர்களுக்கு ஆராத்யர்களாகவுமானார்கள் என்று திருவுள்ளம். ‘அன்னவர்’ என்பதினால் பரிஶுத்தர்களாயிருக்கையாவது, ஸாராஸாரவிவேகமுடையவர்களாயிருப்பதாவது விவக்ஷிதம்.

இவன் செய்யவேண்டிய கார்யங்களைச்செய்து முடித்தவனைகயினால் ப்ரபத்திக்குப் பின்பு செய்கிற நித்ய நைமித்திகக் கர்மங்களெல்லாம் பகவானுடைய ஆஜ்ஞையை பரிபால

னம் செய்வதாகிய கைங்கர்யமாகிறது என்று ப்ரபன்னனுடைய க்ருதக்ருத்யதையையும், நித்ய நைமித்திகங்கள் அவஶ்யம் செய்ய வேண்டுமென்பதையும் அருளிச் செய்துகொண்டு நிகமனம் செய்தருளுகிறார்—'ஹ மவதி' என்றாரம்பித்து.

ப-ரை] **வாஈ** - ஸம்ஸாரத்தின் அக்கரையை, அதாவது அக்கரையாகிற பரமபதத்தை யென்றபடி, **மஞ்ஜு** - அடைவதற்காக, **ஹமவதி** - பகவானாகிய, **ஷாஷ** - நாராயணனிடத்தில், **ஹாநூவிநம்** - பரந்யாஸம், **கூரதம்**-செய்யப்பட்டது,'**ஹமவதி**'என்பதினால் ஜ்ஞானஶக்த்யாதி கல்யாண குணங்கள் நிறைந்தவனாயும், கெட்ட குணங்கள் ஒன்று மில்லாதவனாயுமிருக்கிறான் என்பது விவக்ஷிதம். இத்தால் அந்த மோக்ஷ பலத்திற்காக ஒன்றும் செய்யவேண்டியதில்லை என்பது த்யோதிதம். '**வாஈ**' என்பதினால் கடவல்லியில் வஶப்படுத்தவேண்டியவைகளை வகுத்துச் சொல்லியிருக்கிற ஶ்ருதியிலிருக்கிற '**வாஈ**' என்கிற பதமும், அதின் வழியாக அந்த ஶ்ருதியும் ஸூசிப்பிக்கப்படுகிறது. அதாவது அவ்விடத்தில் வஶப்படுத்தவேண்டிய வஸ்துக்களில் இதுக்குமேலே இல்லை என்று சொல்லப்படுகிற பகவானை வஶப்படுத்துவதற்கு இதைத் தவிர வேறு உபாயமில்லை என்று '**தஸ்ய வஶீகரணம் தவூாணாமதி ஶுவ**' என்று ஸ்ரீ பாஷ்யகாரரினால் அருளிச் செய்யப்பட்ட ஶரணாகதி செய்யப்பட்டது. ஆகையினால் வேறொருவனை வஶீகரிக்க வேண்டியதுமில்லை, அவனை வஶீகரிக்கக் கூடியதும் இதைவிட வேறில்லை என்று தாத்பர்யம். **வரிஜித**-அல்பமான, **ஸூவ்**-ஸுகங்களின்,**ஹூவி**-அடைவதற்காக, **கூரதூ**-செய்யவேண் கார்யம், அதாவது ஐஶ்வர்ய கைவல்யாதிகளுக்காகச் செய்ய வேண்டிய உபாயானுஷ்டானம், **சுகூரதூவஃ** - நிஷித்தமான கார்யத்தைப்போல, **ஹூஹீணம்**-விடப்பட்டது, இத்தால் இதற்காகவும் ஒன்றும் செய்யவேண்டியதில்லை என்பதும் ஏற்பட்டது, **வவாவ-ூரதிஃ** - தேஹத்தின் ஸ்திதியும், அதாவது அதின் ரக்ஷணமும், **வஶிவ-ும்**-முன் ஜன்மத்தில், **கூரெதைஃ**-செய்யப்பட்ட புண்ய பாபகர்மங்களினால், **நியதகூஶா** - ஏற்படுத்தப்பட்டிருக்கிற ஸுகதுக்கங்களின் வரிசைகளை யுடையதாக

**ഭവதி** - உண்டாகிறது. இத்தால் இதற்காகவும் ஒன்றும் தான் செய்யவேண்டியதில்லை என்பதேற்படுகிறது. (ஆகையினுல்) **பரம்** - ப்ரபத்தி செய்த பிறகு, **இஹ** - இந்த ஸம்ஸாரத்தில், **புதை:** - பண்டிதர்களினுல், அதாவது ப்ரபன்னர்களினுல், **விஷ்ணோ:** - பகவானுடைய, **ஆஜ்ஞாஸேதவ:** - ஆஜ்ஞையாகிற எல்லை, **அநுபால்யந்தே** - பரிபாலனம் செய்யப்படுகிறது. இத்தால் அவனுடைய ஆஜ்ஞையைப் பரிபாலனம் செய்வதற்காக மாத்திரம் நித்திய நைமித்திகாதிகளைச் செய்கிருர்கள் என்பது த்யோதிதம்.

திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான் பகவத்விஷயம்
ஸ்ரீ உப. வே. நரஸிம்மாசார்ய ஸ்வாமிகளினுல்
செய்யப்பட்ட

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார வ்யாக்யானத்தில்
க்ருதக்ருத்யாதிகாரம்
முற்றிற்று.



|| ஶ்ரீ: ||

|| ஶ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:

# ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரம்.

---

[ஸ்வரூபநிஷ்டை — உபாய நிஷ்டை—புருஷார்த்த நிஷ்டை—இந்நிஷ்டைகளின் பலம்].

**ஸ்வரூபோபாயாபேக்ஷ்யேஷ்வவிதத நிவிஷ்ட ஸ்திரமதே:**
**ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநம் ஸஹக மவக்ரா ப்ரவணதாஶ் |**
**அப்யஸ்ரா யஸ்யாஸ்தே ப்ரபவதி விநீத: ஸ்வமயிதம்**
**ஶரீராந்து ஸ்வாந்தாந்து ககமமஹத ஸ்தூலீர் நிவஹாத் ||**

---

|| ஶ்ரீ: ||

|| ஶ்ரீமதே ஶ்ரீநிவாஸராமாநுஜ மஹாதேஶிகாய நம: ||

இப்படிக் கீழதிகாரத்தில் க்ருதக்ருத்யனென்றருளிச்செய்தது ஸங்கதமாகுமோ, இந்த தேஹத்துடன் இருக்கிற வரையிலும் அயலார் தன்னைப் பரிபவாதிகள் பண்ணும்பொழுதுவிகாரங்களும்,இதர ப்ரயோஜனங்கள் கிடைக்காவிடில் துக்கம் முதலியவைகளும் உண்டாகிறபடியினுல்,என்னில்? அவைகளை நிவ்ருத்தி செய்வதற்குக் காரணங்களாகிய நிஷ்டைகளையும் அவைகள் தனக்குண்டென்று என்று தெரிந்துகொள்ளக்கூடிய லக்ஷணங்களையும் அருளிச் செய்யப்போகிறவராய் அதிகாரார்த்தத்தை ஸங்க்ரஹித் தருளுகிறுர்—'**ஸ்வரூபோபாய**' என்றுரம்பித்து.

ப - ரை ] **ஸ்வரூப**-தேஹத்தைவிட வேறு பட்டதாயிருக்கிற தன் ஸ்வரூபம், **உபாய** - ப்ரபத்தி, **அபேக்ஷ்ய** - மோக்ஷம், இவைகளில், **அவிதத**-பொய்யில்லாமல், **நிவிஷ்ட**-வைக்கப்பட்டிருக்கிற, அதாவது உள்ளபடியான, **ஸ்திர** - உறுதியான, அதாவது யுக்திகளினுல் கலக்கமுடியாததான, **மதே:** - புத்தியை யுடையவனுக்கு, **ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநம்** - தன்னுடைய கீழ்ச்சொல்லிய ஸ்வரூபாதிகளில் ஸ்திரமான ஜ்ஞானமிருப்பதற்கு அடையாளங்களாகிய அயலார் நிந்தித்தபோதிலும் விகாரமில்லாமை முதலியது, அன்றிக்கே

விகாரம் முதலிய அடையாளங்களாலே தன்னுடைய நிஷ்டைகளை ஊஹித்தறிந்து கொள்ளுவதாகவுமாம், **உபநதாஸ்**-ஸமீபத்தில் கிடைக்கப்போகிற, அதாவது இந்த தேஹாவஸாநத்தில் புருஷார்த்தம் நிஸ்சயமாய்க் கிடைக்குமாகையினால் ‘**உபநதாஸ்**’ என்று அருளிச்செய்யப்பட்டிருக்கிறது, அன்றிக்கே ‘அச்சுவை பெறினும் வேண்டேன்’ இத்யாதிகளிற் போலே மோக்ஷம் கையிலிப்பொழுதே கிடைத்தபோதிலும் என்றர்த்தமாகவுமாம், **அபவர்காத்** - மோக்ஷத்தைக்காட்டிலும், **ஸுமஹம்** - மிகவும் போக்யமானது, இத்தால் இப்படி ஸ்திரமான புத்தி இல்லாதவர்களுக்கு பரிபவம் முதலியவைகளில் மனதின் விகாராதிகள் ஸம்பவித்தபோதிலும் இவைகளையுடையவனுக்கு தன்னுடைய நிஷ்டைக்கு விரோதியாகையினால் அவைகள் உண்டாகாது என்றும், இந்த ஸ்வநிஷ்டாபிஜ்ஞானத்தை பல நிரூபணபேடிகையில் நிரூபித்திருப்பதற்குக் காரணமும் ஸூசிப்பிக்கப்பட்டதாகிறது, **ஆதௌ** - முதலில், **யஸ்ய**-எந்த ஸ்வநிஷ்டாபிஜ்ஞானத்தினுடைய, **மஹிம்நா** - ப்ரபாவத்தினால், **விநீத:** - சிக்ஷிக்கப்பட்டவன், அதாவது இது நமக்கு ஸ்வரூபவிருத்தம் என்கிற ஜ்ஞானத்தை உண்டாக்கி லஜ்ஜை முதலியவைகளினால் விகாரம் முதலியவைகள் உண்டாகாமல் திருத்தப்பட்டவன் என்று தாத்பர்யம், ‘**அயம்**’ என்று பாடாந்தரம், அப்பொழுது **அயம்** - இந்த ப்ரபன்னன் என்றர்த்தம், **கம்பீராந்** - ஆழமானதும், **துஷ்பாராந்** - நிறைக்க முடியாததும், **ககநமஹத:** - ஆகாஸத்தைக்காட்டிலும்பெரியதுகளுமாகிய, **அகநிவஹாந்**- தோஷங்களின் கும்பல்களை, **ஸ்தகயிதும்** - மறைப்பதற்கு, **ப்ரபவதி** - சக்தியுடையவனாகிறானே.

‘**கம்பீராந்**’ என்பதினால் இதற்கு விஷயங்கள் ஸம்பாதிக்க முடியாதென்பதும், ‘**துஷ்பாராந்**’ என்பதினால் அப்படி ஸம்பாதித்தாலும் அவைகள் போதாது என்பதும், ‘**ககநமஹத:**’ என்பதினால் ஒவ்வொன்றே இவனுக்கு ஸர்வனிதாநத்தங்களுக்கும் காரணமாநதென்பதும் ஸூசிப்பிக்கப்படுகிறது. இவ்விடத்தில் ‘**[illegible] துஷ்பார[illegible]**’, ‘**[illegible] துஷ்பார[illegible]**’ இத்யாதி அநுஸந்தேயம்.

இப்படித் தனக்கு நிஷ்டையுண்டென்று தானறி யும்படி யெங்ஙனே யென்னில்:—வராலே வரிஹ ஸ்வரூபநிஷ்டை. வாதிக ளுண்டாம்போது தன் ஷெஹாதிகளைப்பற்ற வரிஹாவகர் சொல்லுகிற குற்றங்கள் தன் ஸ்வரூபத்தில் தட்டாதபடி கண்டு விஷாதாதிக ளற்றிருக்கையும், 1 'ஶவ்ஜாநஸ்ய யச் வாவம் ஶவஞ ஊயிமஹ்தி' என்கிறபடியே வரிஹவாதிகளாலே தன் வாவத்தை வாங்கிக் கொள்ளுகிற மதிகேடரைப்பற்ற 2 'வஐவெவ ராணி ஹூதாநி வெஷம் கூவந்தி வெதத: | ஶொசுாநஹொதிவொஹெந வ்யாவாநீதி ஊநீஷி

இப்படி-ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களிலே. திருமந்திரத்தில் ஸ்வரூபோபாய புருஷார்த்தம் ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கும் க்ரமத்தை யனுஸரித்துமுதலில்ஸ்வரூப நிஷ்டையினடையாளங் களையருளிச்செய்கிறார்—'வராலே' என்றாரம்பித்து. வரிஹவம்-அவமானம், வரிஹாவகர் - அவமானம் செய்யுமவர். 'குற்றங்க' ளாவன குரூபியாயிருக்கை, ஆபிஜாத்யாதிக ளில்லாமலிருக்கை, முதலியவை. தட்டாதபடி - ஸம்பந்தப் படாம லிருக்கும்படியான ப்ரகாரத்தை. விஷாதம் - துக்கம், ஆதி - அதைப் பரிஹரிப்பது, ஶவஜாநஸ்ய - நிந்திக்கப்படு கிறவனுடைய, வாவம் யச் - பாபம் எதுவோ, (அது) ஶவஞம் - நிந்திக்கிறவனே, ஊயிமஹ்தி - அடைகிறது. மதிகேடர் - புத்தி இல்லாதவர்கள். வஐவெவராணி - ஒன்றோடொன்று த்வேஷத்தை யுடையவைகளான, ஹூதாநி - ப்ராணிகள், வெஷம் - தன்னிடத்தில் த்வேஷத்தை, கூவந்தி வெச் - செய்கிறதேயானால், இத்தால் தன்னிடத்திலாவது வேறு ப்ராணிகளிடத்திலாவது த்வேஷம் செய்தால் க்ருபை செய்யவேண்டு மென்பதும், இரண்டையும் ஸமமாகப் பார்க்கவேண்டு மென்பதும் த்யோதிதம். அன்றிக்கே 'வஐவெவராணி' என்பதினால் தன்னிடத்தில் த்வேஷமும், 'வெஷ' என்பதினால் அதின் கார்யமான நிந்தை முதலியவைகளும் சொல்லப்படுகிறதாகவு மாம், ததஃ - பிறகு, ஊநீஷிணா - புத்திமானால், அதிஶொ

1 பார-ஆஸ்-100-64. 2 வி-பு-1-17-82.

ணா ||', 1 ஆத்மத்ரோஹம் அமர்யாதம் மூடம் உஜ்ஜித ஸத்பதம் | ஸுதராம் அநுகம்பேத நரகார்சிஷ்மதிந்தநம் ||' என்கிறபடியே கரைபுரண்ட க்ருபையையும், 2 'அமர்யாத: க்ஷுத்ர:' என்கிற ச்லோகத்தாலும், 3 'வாடினேன் வாடி' முதலான ஆழ்வார்கள் பாசுரங்களாலும் தனக்கநுஸந்தேயமாக வுபாஸித்த தோஷங்களை பரிவாதாதிகளாலே மறவாதபடி பண்ணினார்களென்கிற வுபகாரஸ்ம்ருதியும், ஆத்மாக்களுக்கெல்லாம் ஸ்வரூபாநுரூபமான ஸமஸ்த பாரதந்த்ர்யத்தையும்

---

மோஹந-அதிக அஜ்ஞானத்தினால், வ்யாப்தாநி-(இவைகள்) வ்யாபிக்கப்பட்டிருக்கின்றன, 'அஹோ' என்பது துக்கத்தைக்காண்பிக்கிறது, இதி-என்று, சோச்யாநி-துக்கப்படத் தக்கவைகள், ஆத்மத்ரோஹம் - தனக்கே த்ரோஹம் செய்து கொள்ளுகிறவனையும், அதாவது அபலாருடைய பாபத்தையும் தான் வாங்கிக் கொள்ளுகிறபடியினால் அநர்த்தத்தைத் தேடிக் கொள்ளுகிறவனையும், அமர்யாதம்-சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட மர்யாதையை அதிக்ரமித்தவனையும், உஜ்ஜிதஸத்பதம் - விடப்பட்டிருக்கிற நல்ல மார்க்கத்தை யுடையவனையும், மூடம்-ஆத்ம ஸ்வரூபத்தை யறியாதவனையும், நரக - நரகமாகிற, அர்சிஷ:-நெருப்புக்கு, இந்தநம்-விறகாகவும் இருக்கிற மனிதன், ஸுதராம்-மிகவும், அநுகம்பேத-க்ருபைபண்ணக் கடவன். 'சோச்யாநி' என்பது அபலாரின் துக்கத்தைப் பொறுக்காதிருக்கையாகிற தயையைச் சொல்லுகிறது என்கிற தாத்பர்யத்தினால் 'கரைபுரண்ட க்ருபையையும்' என்றருளிச்செய்யப்பட்டிருக்கிறது. அமர்யாத:, க்ஷுத்ர: - நீசன். தனக்கு - ப்ரபன்னனுப் ஸ்வநிஷ்டைகளை தெரிந்துகொள்ள வேண்டிய ஸ்திதியிலிருக்கிறவனுக்கு. பரிவாதம் - நிந்தை. 'மறவாதபடி' இத்பாதினால் 'பச்யதி பரதோஷாந் அஸதோபி ஜந: ஸதோபி நைவ ஸ்வாந் | விபரீதமிதம் ஸ்வஸ்மிந் ஹிதோபதேஷ்டாரம் ஜநமபேக்ஷ்யஷே: ||' என்கிறபடியே அஜ்ஞாநிகளாலே தன்னுடைய தோஷங்களைத் தான் மறக்க அவைகளை ஜ்ஞாபகப்படுத்தினபடியினால் என்றர்த்தம். இந்த ஸ்வதோஷங்கள் தன்னுடைய கார்ப்பண்யத்தை

---

1 2 ஆள-ஸ்தோ-62. 3 பெ-தி-1-1-1.

க்ஷேத்ரஜ்ஞரெல்லாரும் கர்மவஶ்யராய் நிற்கிற நிலை
யையும் பார்த்து நமக்கும் நம்மளவில் பரிபவாதி
கள் பண்ணுகிற சேதநருக்குமுள்ள கர்மாநுகுண
மாக இன்புறுமிவ்விளையாட்டுடையனான ஸர்வஜ்ஞ
ஶேஷியாலே ப்ரேரிதராயவர்கள் பரிவாதாதிகள்
பண்ணுகிறார்களென்று அவர்கள் பக்கல் நிர்விகார
த்வத்தையும், ப்ராரப்த பாபவிஶேஷஞ் சிதையறுகிற
தென்கிற ஸந்தோஷமும் நடையாடிற்றாகில் ப்ரணவ
மத்யமபதங்களிலே ஶோதிதமானபடியே அசித்வி
லக்ஷணத்வத்தையும், ஸர்வஹிதாநுகூல்யாதிகளுக்கு
யோக்யமான ஜ்ஞானத்தையும், ஸர்வஶேஷத்வமான

---

மறவாமைக்கு அவஶ்யம் அநுஸந்தேயங்கள். **எல்லாரும்** - தானும் தன்னை நிந்திப்பவர்களும். **நம்மளவில்** - நம் விஷயத்தில். '**கர்மாநுகுணமாக**' என்பதினால் பகவானுக்கு வைஷம்யமில்லை என்பது த்யோதிதம். **இன்புறும்** - ஆநந்தத்தை யடையும்படி, **இவ்விளையாட்டுடையன்**-இப்படிப்பட்ட லீலைகளையுடையவன். **ப்ரேரிதராய்** - (அவர்கள் கர்மங்களுக்குத் தக்கபடி பகவானால்) நியமிக்கப்பட்டவர்களாய். '**ஶேஷி**' ஶப்தம் அப்படி அவர்கள் செய்யும் பரிபவங்களுக்குத் தான் விஷயமாயிருப்பதும் தன்னுடைய கர்மாநுகுணமாக ஈஶ்வரனால் ஏற்படுத்தப்பட்டது என்கிற அநுஸந்தானத்தைக் குறிக்கிறது. **நிர்விகாரத்வத்தை**-கோபம் முதலியவை இல்லாமல். **சிதையறுகிறது**-நுனியில் வெட்டப்படுகிறது, அதாவது அதில் சில அம்ஶங்கள் கழிந்துவிடுகிறது என்று தாத்பர்யம். **நடையாடிற்றாகில்** - இருந்ததாகில், 'நடையாடிற்றாகில்' என்றருளிச் செய்யப்பட்டிருப்பதினால் ஸர்வதா இப்படிப்பட்ட விகாரமில்லாமை முதலியவைகள் எல்லாமில்லையேயாகிலும் இவைகளில் ஏகதேஶமாவது சிற்சில ஸமயங்களில் உண்டானாலும் போதும் என்பது த்யோதிதம். இப்படி விகாரங்களில்லாமைக்குக் காரணமாகிய ஆகாரங்களுடன் ஜீவாத்ம ஸ்வரூபம் ப்ரதிபாதிக்கப்படுகிற ப்ரகாரத்தை யருளிச் செய்கிறார்—'**ப்ரணவ**' என்றாரம்பித்து. திருமந்திரத்தில் என்று சேர்த்துக்கொள்ளவும். இவை இரண்டும் ப்ரணவத்தில் மகாரத்தினால் சொல்லப்படுகிறது **ஸர்வஶேஷத்வமான** - எல்

வாக்யத்தையும், ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தனா ரக்ஷகனுமான ஸ்வதந்த்ர ஶேஷிக்கு இஷ்டவிநியோகார்ஹமாம்படி அநந்யார்ஹஶேஷத்வ பாரதந்த்ர்யங்களையும், 1 'யத் ஹிதம் மம தேவேஶ' இத்யாதிகளிற்படியே பராதீநஹிதஸித்தியையுமுடைய தன் ஸ்வரூபத்திலே நிஷ்டையுண்டென்றறியலாம். ஸர்வே

உபாயநிஷ்டை. ஶ்வரனையொழியத் தானும் பிறரும் தனக்குத் தஞ்சமன்றென்கிற புத்தியும், ம்ருத்யுபர்யந்தமான பயஹேதுக்களைக் கண்டாலும் 2 'ப்ராயேணாக்ருதக்ருத்யத்வாந் ம்ருத்யோருத்விஜதே ஜந: । க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும்

---

லாப்ரகாரத்தாலு முண்டாகிய, இது நமஸ்ஸப்தத்தின் அர்த்தம். இஷ்டவிநியோகார்ஹமாம்படி - தன்னிஷ்டப்படி உபயோகித்துக் கொள்ளும்படி. இது இந்த இரண்டு பதங்களினாலும் நிரூபிக்கப்பட்ட அர்த்தம். தேவேஶ - ஓ! தேவஶ்ரேஷ்டனே, மம - எனக்கு, யத் - எது, ஹிதம் - நன்மையோ (அதையே எனக்கு ஆஜ்ஞாபியும்). பராதீநஹிதஸித்தியை - தனக்கு ஹிதம் அவனுடைய அதீனத்தினாலேயே கிடைக்கவேண்டிய ஸித்தியையுடைய. இது நமஸ்ஸப்தார்த்தம். 'அறியலாம்' என்பதற்கு அசித் வைலக்ஷண்யாதிகளையுடைய ஸ்வரூபத்தில் நிஷ்டையிருந்தால் கீழ்ச் சொல்லிய விகாரம் முதலியவைகள் உண்டாகாதாகையினாலே விகாரமற்றிருக்கை முதலிய கார்யங்களைக்கொண்டு அதற்குக் காரணமான அசித் வைலக்ஷண்யாதிகளுடன் கூடிய ஸ்வரூப நிஷ்டை உண்டென்று ஊஹித்துக் கொள்ளலாம் என்று தாத்பர்யம். இப்படியே மேலும் கண்டு கொள்வது. உபாயநிஷ்டையின் அடையாளங்களை அருளிச்செய்கிறார் — 'ஸர்வேஶ்வரனை' என்றாரம்பித்து. தஞ்சம் - ரக்ஷகர்கள். ம்ருத்யுபர்யந்தமான - மரணம் வரையிலான. இது பயத்திற்கு விசேஷணம். பயஹேதுக்கள் - இப்படிப்பட்ட பயங்களுக்குக் காரணமான ஸர்ப்பாதிகள். ஜந: - ஜனமானது, ப்ராயேண - அனேகமாக, அக்ருதக்ருத்யத்வாத் -

1 ஜிதந்தா-1-18. 2 இ-ஶா-7-38.

ப்ரிய மதிதிம் ||' என்கிறபடியே இச்சரீராநந்தரம் என்படப்புகுகிறோமென்கிற கரைதலற்ற ஸந்நிஹிதபலத்வாநுஸந்தாநத்தாலே ஹ்ருஷ்டனாயிருக்கையும், 1 'கஜம் வா வீக்ஷ்ய ஸிம்ஹம் வா வ்யாக்ரம் வாபி வராநநா | நாஹாரயதி ஸந்த்ராஸம் பாஹூ ராமஸ்ய ஸம்ஸ்ரிதா ||' என்றும், 2 'அஸந்தேசாத்து ராமஸ்ய தபஸஶ்சாநுபாலநாத் | ந த்வாம் குர்மி தசக்ரீவ பஸ்ம பஸ்மார்ஹ தேஜஸா ||'

செய்யவேண்டிய கார்யத்தைச் செய்து முடிக்காமையினால், ம்ருத்யோ: - மரணத்திலிருந்து, உத்விஜதே - பயப்படுகிறது, க்ருதக்ருத்யா: - செய்யவேண்டிய கார்யத்தைச் செய்து முடித்தவர்கள், ம்ருத்யும் - மரணத்தை, ப்ரியம் - இஷ்டனான, அதிதிமிவ - விருந்தாளியைப்போலே, ப்ரதீக்ஷந்தே - எதிர்பார்க்கிறார்கள். என்படப் புகுகிறோம் - என்ன துக்கத்தை யனுபவிக்கப்போகிறோம், கரைதல் - அதிகமான துக்கம். ஸந்நிஹிதபலத்வாநுஸந்தாநத்தாலே - இஷ்டபலம் ஸமீபத்தில் கிடைக்கப் போகிறபடியினாலே. மேலே அருளிச்செய்யப்பட்டிருக்கிற தேற்றம், தன்னுடைய ப்ரயத்தனமில்லாமலிருக்கை, பலத்தில் அவன் கையையே எதிர்பார்த்திருக்கை, இவை மூன்றையும் பிராட்டி நடத்திக்காட்டியிருக்கிறாளென்பதற்காக முறையே ப்ரமாணங்களை உதாஹரித்தருளுகிறார்—'கஜம் வா' என்றாரம்பித்து. கஜம் வா - யானையையாவது, ஸிம்ஹம் வா - ஸிம்ஹத்தையாவது. வ்யாக்ரம் வா - புலியையாவது, வீக்ஷ்ய - பார்த்து, வராநநா - சிறந்த அழகான முகத்தையுடைய ஸீதை, ராமஸ்ய - ஸ்ரீராமனுடைய, பாஹூ - கைகளை, ஸம்ஸ்ரிதா - அடைந்தவளாய்க்கொண்டு, இது ஹேதுகர்ப்ப விசேஷணம், அடைந்தவளாகையினாலே, ஸந்த்ராஸம் - பயத்தை, நாஹாரயதி - அடைகிறதில்லை. ராமஸ்ய - ராமனுடைய, அஸந்தேசாத் - உத்தரவு இல்லாமையினாலும், தபஸ: - பாதிவ்ரத்யமாகிற தபஸ்ஸினுடைய, அநுபாலநாத் - காப்பாற்றுவதினாலும், பஸ்மார்ஹ - பஸ்மமாகச்செய்வதற்கு யோக்யனான, தசக்ரீவ -

1 ராமா-அயோ-60-20. 2 ராமா-ஸு-22-20.

ஜஸா ||' என்றும், 1 'ஶரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரபலார்தந: | மாம் நயேத்யதி காகுத்ஸ்த: தத் தஸ்ய ஸத்ருஶம் பவேத் ||' என்றும் பிராட்டி நடத்திக்காட்டின ரக்ஷகாவஷ்டம்பத்தாலுள்ள தேற்றமும், தான் ந்யாஸம் பண்ணின விஷயத்தில் ஸ்வயத்நமற்றிருக்கையும், அநிஷ்டநிவ்ருத்தியுமிஷ்டப்ராப்தியு மவன் கையதே யென்றிருக்கையு முண்டாயிற்றாகில் தான் கோலின ஸகலபலத்துக்கும் உபாயமாகவற்றாய், ஶாஸ்த்ரத்தில் ப்ரபத்திஶப்தத்திலே விஹிதமாய், த்வயத்தில் பூர்வவாக்யத்தி லநுஸந்தேயமாய், திருமந்த்ரத்தில் மத்யமபதத்திலும் விவக்ஷிதமான உபாயத்திலே தனக்கு நிஷ்டையுண்டென் றறியலாம். 2 'உத்பத்திஸ்திதிநாஶாநாம் ஸ்திதஸ்ய விநாஶகாரணஸ்ய |

புருஷார்த்த நிஷ்டை. யதோதேதி யதா நாஶ: ஸ்திதி ஸ்வதந்த்ரஸ்திதி ||', 3 'அவேஷ்டமாநாஸ் ஸம்ஸ்ரீகஞ்சு

---

ஓ! ராவண, த்வாம் - உன்னை ஹத்வா - பஸ்மமாக, நக்ருதி - செய்யவில்லை, பரபலார்தந: - ஶத்ருக்களின் சேனைகளை நாஶம் செய்யும் ஸ்வபாவமுடைய, காகுத்ஸ்த:-ககுத்ஸதவம்ஶத்தில் பிறந்தவராகிய ஸ்ரீராமன், லங்காம் - லங்கையை, ஶரை: - பாணங்களினால், ஸங்குலாம் - நிறைந்ததாக, க்ருத்வா - செய்து, மாம் - என்னை, நயேத்யதி - அழைத்துக் கொண்டு போவாரேயானால், தத் - அது, தஸ்ய - அந்த ஸ்ரீ ராமனுக்கு, ஸத்ருஶம் - அனுரூபமாக, பவேத் - ஆகும். ரக்ஷகாவஷ்டம்பம் - ரக்ஷகனை அடைந்திருக்கை, தேற்றம் - தைர்யம். அவன்கையதே - அவன் கையில் இருக்கிறது. உபாயமாக வற்றாய் - உபாயமாகக் கூடியதாய். சில யோஜனைகளில் நேரில் அர்த்தமானாலும் மற்ற யோஜனைகளில் தாத்பர்ய விஷயமா யிருக்கிறபடியினால் பொதுவாக 'விவக்ஷிதமான' என்னும் பதம். புருஷார்த்த நிஷ்டையை நிரூபிக்கிறார்—'உதேதி' என்றாரம்பித்து. உதேதி-உண்டாவது,

---

1 ராமா-ஸு-39-30. 2 3 பார-ஶா-339-13.

உபதிஷ்டதி। கர்த்தா கர்மாநவரதம் அந்யோ நாஹாரம் அதிகச்சதி॥' என்கிறபடியே ஸ்வகர்ம விசேஷாதீநமாக ஈஸ்வரன் செய்யும் தேஹயாத்ராதிகளில் கரைதலற்று, தான் கரைந்தாலும் 1 'உத்பததி வா ஆகாஸம் விஸதி பாதாலம்। அடதி மேதிநீம் க்ருத்ஸ்நாம் நாதத்தம் உபதிஷ்டதே॥', 2 'யத்கிஞ்சித் வர்த்ததே லோகே ஸர்வம் தந்மச்சேஷ்டிதம்। அந்யோ ஹ்யந்யச் சிந்தயதி ஸ்வச்சந்தம் விதாம்யஹம்॥' என்கிறபடியே ஸர்வேஸ்வரன் நினைவின்படி

---

**ஸ்திதி** - நீடித்திருப்பது, **நாஸ** - நாஸம், இவைகளுக்குள், **தவ** - உனக்கு, **ஸ்திதௌ** - ஸ்திதி விஷயத்தில், **சிந்தா** - சிந்தை, **குத:** - எந்தக் காரணத்தினால் (உண்டாகிறது), **உத்பத்தி: யதா** - உத்பத்தி (எப்படிவருகிறதோ), **நாஸ: யதா** - நாஸம் (எப்படிவருகிறதோ), **ஸ்திதி:** - ஸ்திதியும், **ததைவ** - (அப்படியே), **பவிஷ்யதி** - வரப்போகிறது. **அசேஷ்டமாநம்** - ப்ரயத்தினம் செய்யாமல், **ஆஸீநம்** - உட்கார்ந்துகொண்டிருக்கிற, **கஞ்சித்** - ஒருவனை, **ஸ்ரீ:** - ஸம்பத்து, **உபதிஷ்டதி** - அடைகிறது, **அந்ய:** - வேறாகிய, **கர்த்தா** - ப்ரயத்தனத்தைச் செய்கிறவன், **கர்ம** - ப்ரயத்தனத்தை, **அநவரதம்** - தொடர்ச்சியாகச் செய்தாலும், அன்றிக்கே **கர்மாநுஸாரேண** - அவரவர்கள் செய்கிற கர்மத்திற்குத்தக்கபடி, **ஆஹாரம்** - ஆஹாரத்தையும், **நாதிகச்சதி** - அடைகிறதில்லை. **ஆகாஸம்** - ஆகாஸத்தைக்குறித்து, **உத்பததி** - எழும்பினபோதிலும், **பாதாலம்** - பாதாளத்தை, **விஸதி** - ப்ரவேஸித்தபோதிலும், **க்ருத்ஸ்நாம்** - எல்லா, **மேதிநீம்** - பூமியை, **அடதி** - ஸஞ்சரித்தபோதிலும், **அதத்தம்** - பூர்வஜன்மத்தில் கொடுத்து வையாதது, **நோபதிஷ்டதே** - இந்த ஜன்மத்தில் உண்டாவதில்லை. **லோகே** - இந்த லோகத்தில், **யத்கிஞ்சித்** - ஏதாவது, **வர்த்ததே** - இருக்கிறதோ, **தத்ஸர்வம்** - அதெல்லாம், **மச்சேஷ்டிதம்** - என்னுடைய வ்யாபாரம், **அந்ய:** - என்னைத்தவிர மற்றவன், **அந்யத்** - வேறொன்றை, **சிந்தயதி** - எண்ணுகிறான், **அஹம்** - நான், **ஸ்வச்சந்தம்** - என்னுடைய இஷ்டப்

---

1 2 பார-ஸா-359-56.

யல்லதொன்றும் நடவாதென்று அத்யவஸாநம் பண்ணி, 1 'அப்ரயத்நாகதாஸ்ஸேவ்யா க்ருஹஸ்தேஷு விஷயாஸ்ஸதா । ப்ரயத்நேநாபி கர்தவ்யஃ ஸ்வதர்ம இதி மே மதிஃ ॥', 2 'நாஹாரம் சிந்தயேத் ப்ராஜ்ஞோ தர்மமேவாநுசிந்தயேத் । ஆஹாரோ ஹி மநுஷ்யாணாம் ஜந்மநா ஸஹ ஜாயதே ॥' என்று பராஶரகீதாதிகளிலும், 3 'ஸந்நிவர்திதம் தர்ம்யோபபோகம் யத்ருச்சயா । ப்ரத்யாசக்ஷே ந சாப்யேநம் அநுரோத்ஸ்யே ஸுதுர்லபம் ॥' என்று அஜகரோபாக்யாநத்திலுஞ் சொல்லுகிறபடியே ஶாஸ்த்ர விருத்தமல்லாத விஷயங்கள் தானொரு விரகு செய்யாதிருக்க பகவத் ஸங்கல்பத்தாலே தானே வரக்கண்டு ப்ராரப்த கர்ம பலமான தனிசு தீருகிறதென்று விலக்காதே யதாஸம்பவிக்கை

படி, விதயாமி - செய்கிறேன். க்ருஹஸ்தேஷு - க்ருஹஸ்தாஶ்ரமத்தில் இருக்கிறவர்களினால், அப்ரயத்நாகதாஃ - தான் ப்ரயத்தனம் செய்யாமலிருக்கும்பொழுது கிடைத்தவைகளான, விஷயாஃ - ஶப்தம் முதலிய விஷயங்கள், ஸதா - எப்பொழுதும், ஸேவ்யாஃ - அடையத்தக்கவைகள், ஸ்வதர்மஃ - தன்னுடைய வர்ணாஶ்ரம தர்மம், ப்ரயத்நேநாபி - ப்ரயத்னப்பட்டாவது, கர்தவ்யஃ - செய்யத்தகுந்தது, இதி - என்று, மே மதிஃ - என்னுடைய புத்தி. ப்ராஜ்ஞஃ - புத்திமான், ஆஹாரம் - ஆஹாரத்தை, ந சிந்தயேத் - நினைக்கக்கூடாது, தர்மமேவ - தர்மத்தையே, அநுசிந்தயேத் - சிந்திக்கவேண்டும், ஹி - எந்தக் காரணத்தினால், ஆஹாரஃ - ஆஹாரமானது, மநுஷ்யாணாம் - மனுஷ்யர்களுக்கு, ஜந்மநா ஸஹ - ஜன்மத்துடனேகூட, ஜாயதே - உண்டாகிறதோ. யத்ருச்சயா - யாத்ருச்சிகமாக, அதாவது தான் ப்ரயத்தனம் செய்யாமல், ஸந்நிவர்திதம் - வந்திருக்கிற, தர்ம்யம் - தர்மத்திற்கு ஒத்திருக்கிற, உபபோகம் - அநுபவிக்கத்தக்க விஷயத்தை, ந ப்ரத்யாசக்ஷே - தள்ளமாட்டேன், ஸுதுர்லபம் - மிகவும் கிடைக்க அரிதான, ஸுகம் -

1 பார-ஶா-301-35. 2 3 பார-ஶா-177-24.

யும், இப்படி கர்மவிஶேஷாதீநமாக வருகிற ப்ராப்யாப்ராப்யங்களில் 1 'தயோரேகதரோ ராஶிர் யத்யேநமுபஸந்நமேத்। ந ஸுகம் ப்ராப்ய ஸம்ஹ்ருஷ்யேந் நாதுஃகம் ப்ராப்ய ஸம்விஜேத்॥' என்றும், 2 'உளதென்றிறுமாவார்' என்றுஞ் சொல்லுகிற படியே ஹர்ஷஶோகங்களற்று ஸர்வதா ஸர்வமான பரமப்ராப்ய கைங்கர்யத்திலே ருசியும், ஸ்தோத்ரத்திலும் ஸ்ரீவைகுண்ட கத்யாதிகளிலும் 'கதா', 'கதா' என்று வாய் புலற்றப் பண்ணுகிற ப்ராப்தியில் த்வரையும் நடையாடிற்றாகில் திருமந்த்ரத்தில் நாராயணஶப்தத்தில் சதுர்த்தியாலும், த்வயத்தில் சதுர்த்தீநமஸ்ஸுக்களாலும், சரமஶ்லோகத்தில் 'அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்கிற வாக்யத்தாலும் கடலைக்கையிட்டுக் காட்டுமாப்போலே

---

இந்த வஸ்துவை, நாகாங்க்ஷே - அநுஸரிப்பதில்லை, அதாவது ஆசைப்படமாட்டேன். ப்ராப்யாப்ராப்யம் - வேறு ப்ரயோஜனங்கள். தயோ: - அந்த ஸுகதுக்கங்களுக்குள் ஒன்றாகிய, ராஶி: - வகுப்பு, ஏநம் - இந்த மனிதனை, உபஸந்நமேத் - வந்தடைந்ததேயானால், ஸுகம் - ஸுகத்தை, ப்ராப்ய - அடைந்து, நஸம்ஹ்ருஷ்யேத் - அதிக ஸந்தோஷப்படக்கூடாது, துஃகம் ப்ராப்ய - துக்கத்தையடைந்து, ந ஸம்விஜேத் - அதிகப் பயப்படவும் கூடாது. உளது - (இந்த அனுபவிக்கக்கூடிய வஸ்துக்கள் நமக்கு) இருக்கின்றன, என்று - என்று நினைத்து, இறுமாவார் - இறுமாப்பை யடைய மாட்டார், 'உண்டில்லை யென்று தளர்தலதனருகும்சாரார்' என்று மேல் பாட்டு, முன்புண்டாய் இப்பொழுது இல்லாமல்போய் விட்டது என்று துக்கப்படுவதின் ஸமீபத்திலும் போகமாட்டார். வாய்புலற்ற - வாயால் சொல்லி அலற்ற. 'ஸ்தோத்ரத்தில்' இத்யாதிக்கு ஸ்தோத்திரத்தில் 'கதா புந: ஶங்கரதாங்க' என்கிற ஶ்லோகத்திலும், ஸ்ரீ வைகுண்ட கத்யத்தில் 'கதாஹம் பகவந்தம்' இத்யாதி சூர்ணிகையிலும் என்று தாத்பர்யம். 'கடலைக்கை

---

1 பார-ஶா-175-5. 2 இர-திரு-45.

காட்டப்பட்ட வவஸிஷேஷமான வாக்யார்த்த ஷா யத்திலே நிஷ்டையுண்டென்றறியலாம். இப்படி யவ்வோ வடையாளங்களாலே 1 'அஹமாத்மா நதேஹோஸ்மி விஷ்ணுசேஷோஹவஸிஹ: । தமேவ ஶரணம் ப்ராப்தஸ்தத்கைங்கர்ய விகீர்ஷயா ॥' என்கிறபடியே ஸம்ப்ரதாயிகளைக் கொண்டு ஸ்வரூபோபாயபுருஷார்த்த ஷாயங்களில் தன்னுடைய நிஷ்டையை யுணர்ந்து

இந்நிஷ்டைகளின் ப்ரயோஜனம்.

யிட்டுக் காட்டுமோப்போலே' என்பதற்கு ஸமுத்திரத்தில் ஒரு ஏக தேஶத்தைக் குறித்துக் காட்டுமாப்போலே அளவில்லாத பரிபூர்ண ப்ரும்மானுபவம் கீழ்க்குறித்த ஸ்தலங்களில் ஒரு ஏகதேஶமாகக் குறித்துக் காட்டப்பட்டிருக்கிறது என்று தாத்பர்யம். இத்தால் அதின் விஶேஷங்கள், அபரிச்சிந்நத்வம், முதலியவைகள் சொல்ல முடியாதென்பது தெரிவிக்கப்படுகிறது. ஸமுத்திரத்தைக் கையிட்டுக் காட்டும்போது அதற்குள்ளிருக்கும் ரத்தினம் முதலியவைகள் எப்படிக் காட்டப்படவில்லையோ அதைப்போல இங்கும் என்று திருவுள்ளம். இப்படி ஸ்வநிஷ்டையைத் தெளிந்தவனுக்கு மரணபர்யந்தமான பயஹேதுக்களில் பயமும் விஷய ஸுகங்களில் ப்ரீதியும் உண்டாகாது என்று ப்ரமாணங்களுடன் நிரூபித்தருளுகிறார்—' இப்படி ' என்றாரம்பித்து. அடையாளங்களாலே - கீழ்ச் சொல்லிய நிர்விகாரத்வாதி அடையாளங்களைக் கொண்டு. திருமந்திரத்தில் ஸ்வரூபாதிகள் ப்ரதிபாதிக்கப்பட்டிருந்தபோதிலும் அவைகளில் இவனுக்கு நிஷ்டை உண்டாக வேண்டுமென்பதற்கு ப்ரமாணம் அருளிச் செய்கிறார்—' அஹம் ' என்றாரம்பித்து. அஹம்-நான், ஆத்மா-ஆத்மா, தேஹ:-தேஹமாக, நாஸ்மி-ஆகவில்லை, விஷ்ணுசேஷ:-பகவானுக்குச் சேஷபூதன், அவஸிஹ:-வேறொரு வஸ்துவை எனக்குச் சேஷபூதமாக வுடைத்தானவனுமல்லேன், தத்கைங்கர்ய விகீர்ஷயா - அந்தப் பகவானுக்குக் கைங்கர்யம் செய்யவேண்டுமென்கிற ஆசையினால், தமேவ - அந்தப் பகவானையே, ஶரணம் - ஶரணமாக, ப்ராப்த: -

1

போருமிவ்வதிகாரிக்கு 1 'நைஷா பஶ்யதி ராக்ஷஸ்யோ நேமாந் புஷ்பபலத்ருமாந் । ஏகஸ்தஹ்ருதயா நூநம் ராமமேவாநுபஶ்யதி ॥' என்கிறபடியே விரோதியோடே கூடியிருக்கிற தனக்குப் பாக்ஷிகமாக ஸம்பாவிதமான பாகவதாபசாராதி வ்ருத்திகளான வேதேனுமொரு பீதிஹேதுக்களிலும், ஸ்வருசிப்ராப்த கைங்கர்ய வ்ருத்திகளான வேதேனுமொரு ப்ரீதிஹேதுக்களிலுங் கண்ணோட்டமுண்டாகாது. யத்ருச்சயா உண்டானாலு மவற்றால் பீதியும் ப்ரீதியுமுண்டாகாது.

முக்கிய மந்திரங் காட்டிய மூன்றினிலை யுடையார்
தக்கவையன்றித்தகாதவையொன்றுந்தமக்கிசையார்
இக்கருமங்களெமக்குளவென்னு மிலக்கணத்தால்
மிக்கவுணர்த்தியர்மேதினிமேவியவிண்ணவரே. 21

---

அடைந்தேன், இது ஸ்வானுஸந்தானரூபமா யிருப்பதினால் இப்படியே எல்லாரும் அனுஸந்திக்க வேண்டுமென்பது இந்த வசனத்திற்குத் தாத்பர்யமென்று திருவுள்ளம். **ஏஷா**- இந்த ஸீதை, **ராக்ஷஸ்ய:** - ஏகாக்ஷி முதலிய ராக்ஷஸ ஸ்திரீகளையும், **இமாந்** - இந்த, **புஷ்பபலத்ருமாந்**-புஷ்பங்களுடனும் பலங்களுடனும் கூடிய வ்ருக்ஷங்களையும், **ந பஶ்யதி** - பார்க்கிறதில்லை, **ஏகஸ்தஹ்ருதயா** - ஒரே வஸ்துவிடத்தில் இருக்கிற மனதை உடையவளாய்க் கொண்டு, **ராமமேவ** - ராமனையே, **நூநம்** - நிஸ்சயமாக, **அநுபஶ்யதி** - பார்க்கிறாள். '**விரோதியோடே**' என்பதற்குப் பகவானை யனுபவிப்பதற்கு விரோதியான ஶரீரம் முதலியவைகளோடு என்று தாத்பர்யம். '**பாக்ஷிகமாக**' என்பதற்கு வந்தாலும் வரலாம், வராவிட்டாலும் இல்லை என்கிற க்ரமமாக என்று தாத்பர்யம். **பாகவதா:** - பாகவதர்கள். '**ஆதி**' பதத்தினால் பகவதபசாரம் குறிக்கப்படுகிறது. **கண்ணோட்டம்**-பார்

---

1 ராமா॰ஸு॰-16-25.

வை, அதாவது அவைகளின் அனுஸந்தானம், அவைகளைத் தெரிந்து கொள்ளமாட்டான் என்று தாத்பர்யம்.

இப்படி ஸ்வநிஷ்டாபிஜ்ஞானங்களை யுடைய ப்ரபன்னர்களை ஸ்துதித்தருளுகிறார்—'**முக்கிய**' என்றாரம்பித்து.

ப - ரை] **முக்கிய** - (மந்திரங்களுக்குள்) முக்கியமான, **மந்திரம்**- திருமந்திரம், **காட்டிய** - தெரிவிக்கிற, **மூன்றில்**-ஸ்வரூபம், உபாயம், புருஷார்த்தம், ஆகிய மூன்றில், **நிலையுடையார்** - நிஷ்டையை யுடையவர்கள், **தக்கவை யன்றி** - தங்களுடைய நிஷ்டைகளுக்குத் தகுந்த நித்ய நைமித்திக கர்மங்களைத் தவிர, **தகாதவை** - அனுசிதங்களான காம க்ரோதாதிகளை, **இசையார்** - அங்கீகரியாதவர்களாய், **இக்கருமங்கள்**-அயலார் பரிபவாதிகள் செய்யும்பொழுது இந்தவிகாரத்தையடையாமலிருக்கை முதலியவைகள், **எமக்கு**-நமக்கு, **உள**-இருக்கின்றன, **என்னும் இலக்கணத்தால்** - என்கிற அடையாளங்களினால் (அறியப்பட்ட), **மிக்க** - சிறந்ததான, **உணர்த்தியர்** - ஜ்ஞானத்தை யுடையவர்கள், அதாவது கீழ்க் கூறிய அடையாளங்களைக் கொண்டு தங்கள் தங்கள் நிஷ்டைகளைப்பற்றிய ஜ்ஞானத்தை யுடையவர்கள் என்று தாத்பர்யம், அன்றிக்கே இந்த விகாரமற்றிருக்கை முதலிய கார்யங்களுண்டாகும்படியான மேன்மையுடைய ஸ்வரூபாதிகளைப்பற்றிய ஜ்ஞானத்தை உடையவர்கள் என்றர்த்தமாகவுமாம், **மேதினிமேவிய** - பூமியில் வஸிக்கிற, **விண்ணவரே**-நித்யஸூரிகளே. இப்படி இந்தப் பூமியிலேயே அவர்களை நித்யஸூரிகளாக்கக் கூடிய மஹிமையிருப்பதினால், மோக்ஷத்தைக்காட்டிலும் ஸ்வநிஷ்டாபிஜ்ஞானம் சிறந்தது என்று கீழருளிச் செய்தது ஸங்கதமாகும் என்று தாத்பர்யம்.

இப்படி இவன் ஸூரிதுல்யனாகில் அத்யந்த ஹேயமான ஶரீரத்தை ஏன் ஸஹிப்பான்? அவித்யை முதலியவைகளின் வாஸனைகளும், அதற்கு ஒத்தாசைக்காரணமுமான ஶரீராதிகளுமிருக்க கீழ்க் கூறிய ஸ்வநிஷ்டாபிஜ்ஞானம் ஸம்பவிக்குமோ? என்கிறவை முதலிய ஶங்கைகளுக்குப் பரிஹாரம் அருளிச் செய்கிறார்—'**ஹ்வாவொஜ்ஞாய**' என்றாரம்பித்து.

𑌸𑍍𑌵𑌾𑌪𑍋𑌦𑍍𑌬𑍋𑌧 𑌵𑍍𑌯𑌤𑌿𑌕𑌰 𑌨𑌿𑌭𑍇
𑌸𑌂𑌸𑌾𑌰 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌲𑍇
𑌕𑌾𑌲𑌂 𑌕𑌞𑍍𑌚𑌿𑌜𑍍𑌜𑌗𑌤𑌿 𑌵𑌿𑌧𑌿𑌨𑌾
𑌕𑍇𑌨𑌚𑌿𑌤𑍍 𑌸𑍍𑌥𑌾𑌪𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 ।
𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍋𑌪𑌾𑌯𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌿 𑌵𑌿𑌷𑌯𑍇
𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌦𑌤𑍍𑌤𑌾𑌂 𑌸𑍍𑌵𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌂
𑌶𑍇𑌷𑌾𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌶𑌿𑌰𑌸𑌿 𑌕𑍃𑌤𑌿𑌨𑌃
𑌶𑍇𑌷𑌮𑌾𑌯𑍁𑌰𑍍𑌨𑌯𑌨𑍍𑌤𑌿 ॥

𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌕𑌵𑌿𑌤𑌾𑌰𑍍𑌕𑌿𑌕𑌸𑌿𑌂𑌹𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌸𑍍𑌯 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌕𑍃𑌤𑌿𑌷𑍁
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌰𑌹𑌸𑍍𑌯𑌤𑍍𑌰𑌯𑌸𑌾𑌰𑍇
𑌸𑍍𑌵𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌭𑌿𑌜𑍍𑌞𑌾 𑌨𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌶𑍍𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑌃.

---

॥ 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤 𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥

சீரார் தூப்புற்றிருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணம்.

---

ப-ரை] **𑌕𑍃𑌤𑌿𑌨𑌃** - க்ருத க்ருத்யர்களான ப்ரபன்னர்கள், **𑌸𑍍𑌵𑌾𑌪** - தூக்கம், **𑌉𑌦𑍍𑌬𑍋𑌧** - நன்ருய் விழித்துக்கொள்ளுதல், இவைகளின், **𑌵𑍍𑌯𑌤𑌿𑌕𑌰 𑌨𑌿𑌭𑍇**-ஸம்பந்தத்திற்கு,ஸத்ருஶமான, **𑌸𑌂𑌸𑌾𑌰𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌲𑍇**-ஸம்ஸாரத்திலுண்டாகிய ஸுகதுக்கங்களையனுபவிப்பது,மோக்ஷத்தை யடைவது,இவைகளின் நடுவில், **𑌕𑌂𑌚𑌿𑌤𑍍𑌕𑌾𑌲𑌂**-கொஞ்சக்காலம், **𑌜𑌗𑌤𑌿**-இந்த லோகத்தில், **𑌕𑍇𑌨𑌚𑌿𑌤𑍍** - ஒரு, **𑌵𑌿𑌧𑌿𑌨𑌾** - பாக்யவஶத்தினலே, **𑌸𑍍𑌥𑌾𑌪𑌿𑌤𑌾𑌨𑌾𑌃**-ஸ்தாபிக்கப்பட்டவர்களாய், **𑌤𑌤𑍍𑌤𑍍𑌵** - ஸ்வரூபம், **𑌉𑌪𑌾𑌯**- உபாயம், **𑌪𑍍𑌰𑌭𑍃𑌤𑌿** - முதலிய, அதாவது புருஷார்த்தம், இந்த விஷயத்தில், **𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌦𑌤𑍍𑌤𑌾𑌂** - பகவானல் கொடுக்கப்பட்ட, **𑌸𑍍𑌵𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌂** - தன்னுடைய நிஷ்டையை, **𑌶𑌿𑌰𑌸𑌿** - தலையில், **𑌶𑍇𑌷𑌾𑌂** - திருப்பரிவட்டமாக, **𑌕𑍃𑌤𑍍𑌵𑌾** - தரித்துக்கொண்டு, **𑌶𑍇𑌷𑌂** - மிகுதியான, **𑌆𑌯𑍁𑌃** - ஆயுஸ்ஸை, **𑌨𑌯𑌨𑍍𑌤𑌿** - போக்குகிறர்கள்.

'**ஸுப்ரபாதா ச ரஜநீ**' இத்யாதியினால் ஸ்ரீ ரஹஸ்யரத்னாவளியில் '**ஸதாசார்யஸம்பந்த**த்திற்கு முன்புள்ள **அநாதி காலம்**மெல்லாம் ஒரு **காளராத்ரி**, பின்பு **தேஹாவஸாந**த்தளவும் ஒரு நல்விடிவு. மேல்முழுக்க **ஸூர்யோதய கைங்கர்ய மஹோத்ஸவம்**' என்றருளிச் செய்திருக்கிறபடியே நன்றாய் விழித்துக்கொண்டிருக்கும்படியான மோக்ஷதசையிலும் கேவலம் அஜ்ஞானம் நிறைந்ததான ஆசார்ய பரிக்ரஹத்திற்குமுன்புமுள்ள தசையிலும் வேறுபட்டதாய், '**ப்ராரப்தகர்மவிசேஷ**ங்களாலே **அஜ்ஞாநாந்தகாரமிச்ர**மாய் நடந்தாலும் **ஸதாசார்யப்ரஸாத**த்தாலே **ஜ்ஞாநவைராக்யபக்தி**கள் பூப்போலே **விகஸி**க்கிறபடியும், இத்தாலே தனக்கு வருகிற **ஆமோத**த்தையும் **அநுப**வித்துக் கொண்டு **ப்ரபந்ந**னைப் பல சிற்றின்பம் காட்டி படுக்கிற படுக்கையினின்றும் எழுந்திருந்து நின்று '**நிஸ்ஸம்ஶயஸ்ஸாவரோஹ**' என்கிறபடி **ப்ரதிஷ்டிதப்ரஜ்ஞ**யாயிருந்து * * **உதயாதி**களிற்படியே மேல்வருகிற **ஸகலாநிஷ்டநிவ்ருத்தி**யையும் **நிரதிஶய போகாநந்த ஜநக ப்ராப்தி**யையும் பார்த்து' என்று ஸ்ரீரஹஸ்யரத்னாவளி ஹ்ருதயத்தில் அருளிச் செய்திருக்கிறபடியே அஜ்ஞான லேசமிச்ரமாய் ஜ்ஞானவைராக்ய பக்திகளாகிற ப்ரபோதமும் கலந்திருக்கிறதசை சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். இது ப்ராதஃகால துல்யம். '**கேநசித்விஷயிணா**' என்பதினால் இதர புருஷார்த்தங்களில் வைராக்யத்துடன் ப்ரபத்தி செய்தவர்கள் தேஹத்திலும் அதைச் சேர்ந்தவைகளிலும் ஆசையினால் இங்கிருக்கமாட்டார்களாகையினால் '**வைகுண்டவாஸேபி ந மேபிலாஷ:**', 'இங்கே திரிந்தேற்கு இழுக்குற்றென்', 'அச்சுவை பெறினும் வேண்டேன்', 'நாளும் உருவங்கொண்டு நல்லடியோர் வாழ்வின்பமிங்குறவருகி' இத்யாதிகளிற்படியே மோக்ஷாநந்தத்தைக் காட்டிலும் விலக்ஷணமான ஆநந்தத்தை உண்டாக்குகிற அர்ச்சாவதாரஸங்கத்தினாலும், 'நின் புகழில் வைகும் தம் சிந்தையிலும் மற்றினிதோ நீ யவர்க்கு வைகுந்தம் என்றருளும் வான்', 'இழிபட்டோடும் உடலினிற் பிறந்து தன் சீரையான் கற்று மொழிபட்டோடும் கவியமுத நுகர்ச்சி யுறுமோ முழுதுமே' இத்யாதிகளிற் சொல்லுகிற பகவத்குணாநுபவத்தில் உண்டாகிய ப்ரீத்யதிசயத்தினாலும், பகவானுக்கு இவர்

களைக்கொண்டு லோகத்தை உஜ்ஜீவிப்பிக்கவேண்டுமென்கிற எண்ணத்தினாலும், இந்தப் பூமியில் பாகவதோத்தமர்கள் ஸ்தா பிக்கப்படுகிறார்களாகையினால் இவைகளில் இன்னதென்று நிஸ்சயிக்க முடியாதென்பது தெரிவிக்கப்படுகிறது. '**ஸூதீ தாம்**' என்பதினால் பகவானுடைய அனுக்ரஹ விஸேஷத்தினாலே இந்த நிஷ்டைகள் உண்டாகிறதென்பதும், '**ஸேஷாம்**' என்பதினால் அது பஹுமானிக்கத் தக்கதென்பதும், துர்லபமென்பதும், இப்படிப்பட்ட நிஷ்டையுடையவர்கள் பகவானுக்கு அந்தரங்க பரிசர்யாபரர்களாயிருக்கக்கூடியவர்கள் என்பதும் தெரிவிக்கப்படுகிறது.

திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான் பகவத்விஷயம்
**ஸ்ரீ உப. வே. நரஸிம்மாசார்ய ஸ்வாமிகளினால்**
செய்யப்பட்ட

**ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார வ்யாக்யானத்தில்**
**ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரம்**
**முற்றிற்று.**



|| ஸ்ரீ: ||

| ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம: |

# உத்தரக்ருத்யாதிகாரம்.

---

[உத்தர க்ருத்யத்தின் ப்ரகாரம்—பகவத் குணாநுஸந்தானம்—பரமைகாந்திகளின் ஸஹவாஸம்—கார்பண்யாநு ஸந்தானம்—அர்ச்சாவதாரம் கைங்கர்யத்திற்கு உத்தேஶ்யம்—க்ருதஜ்ஞனாயிருக்கும் ப்ரகாரம்—கரண த்ரயங்களாலும் செய்யவேண்டிய ஸாராம்ஶம்].

**ஸந்தோஷார்த்தம் விம்ருசதி ஸதா ஸ்வஸ்ய ஸாபத்யவித்யாம்**
**நித்யம் ப்ரூதே நிஜயதி வசஸ் ஸார்வஸாம்ராஜ்யதாம்।**
**அம்ஶீகர்த்தும் நிகமஸிரஸாம் வ்ருத்தி ஸாதேவதா**
**ரக்ஷ்யாரக்ஷ்யே ஸ்வபரவிமோக்ஷத்த்ருஷ்டி: ஆபந்ந: ||**

---

|| ஸ்ரீ: ||

| ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸ ராமாநுஜ மஹாதேசிகாய நம: |

கீழதிகாரத்தில் காலக்ஷேபார்த்தமாக பகவானுடைய திவ்ய குணங்களை யனுஸந்திப்பதில் ஆசையினால் இந்தத்தேஹாதிகளை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் என்றருளிச்செய்தது ஸங்கதமாகுமோ? அவைகள் அவனே உபாயம், உபேயம் என்கிற ஜ்ஞானத்திற்கும் மஹா விஶ்வாஸமுண்டாவதற்கும் காரணமன்றோ? அது உபாயானுஷ்டானத்திற்கு முன்பே ஏற்பட்டிருக்குமே? என்கிற ஶங்கைகளை இந்த அதிகாரத்தில் பரிஹரிக்கப்போகிறவராய் அதிகாரார்த்தத்தை ஸங்க்ரஹித்தருளுகிறார்—'**ஸந்தோஷார்த்தம்**' என்றாரம்பித்து.

ப - ரை ] **ஆபந்ந:** - ப்ரபத்தி செய்தவன், **ரக்ஷ்யே** - தேஹத்தை ரக்ஷிக்கவேண்டிய விஷயத்திலும், **அரக்ஷ்யே** - மோக்ஷத்தைப் பற்றியும், **ஸ்வ** - தன்னுடைய, **பர** - (உபாயம் செய்யவேண்டிய) பரத்தின், **விமோக்ஷ** - நிவ்ருத்தித்திருப்பதில்,

அதாவது தேஹயாத்திரை கர்மாதீனையாகையாலும், மோக்ஷம் ஸ்வீக்ருதபரனான பகவானுக்கு அதீனமாகையினாலும் இவ்விரண்டு விதமான ப்ரயோஜனங்களுக்காக இவன் செய்யவேண்டிய தொன்றுமில்லை என்று தாத்பர்யம், **ந்யஸ்தத்ருஷ்டி:** - வைக்கப்பட்டிருக்கிற கண்ணையுடையவனாய், அதாவது இவை இரண்டிலும் இவனுக்கு ஸம்பந்தமிருப்பதாகநினைத்தால்இவனுடைய ஸ்வநிஷ்டாபிஜ்ஞானத்திற்கு விருத்தமாகையினால் இவ்விரண்டு விஷயங்களிலும் ஸாவதானமாயிருந்துகொண்டு, இத்தால் கீழ்இரண்டதிகாரார்த்த மனுவதிக்கப்பட்டதாகிறது, **ஆதேஹபாதாத்** - தேஹம் விடுகிறவரையில், **அநகம்** - அபராதங்களில்லாமையாலே தோஷமில்லாததாயும், **ருசிரம்** - மனோஜ்ஞமாயும், அதாவது வேறு ஸாம்ஸாரிக பலங்களுக்குக் காரணமாயில்லாமல் கேவலம் பகவானுடைய ப்ரீதிக்காக மாத்திரம் அனுஷ்டிக்கப்படுகிறபடியினாலே ஶேஷபூதனான தன் ஸ்வரூபத்திற்குத் தகுந்ததாய் ஸ்வயம் ப்ரயோஜனமாயிருக்கிற என்று தாத்பர்யம், **வ்ருத்திம்** - வ்யாபாரத்தை, நித்யநைமித்திகாதி கர்மங்களை என்றபடி, **அங்கீக்ருத்ய** - அங்கீகரித்தவனாய், **ஸந்தோஷாய** - ஸந்தோஷத்திற்காக, பகவானுடைய குணங்களையனுஸந்தானம் செய்வதினால் உண்டாகும் ஸந்தோஷத்திற்காக என்றபடி, **ஸத்பி:** - பெரியோர்களுடன், அதாவது 'ப்ரும்மஜ்ஞானமுடையவன் ஸத்தென்று சொல்லப்படுகிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்தின்படியே ப்ரும்ம ஜ்ஞானிகளுடன், **த்ரய்யந்தவித்யாம்** - வேதாந்த வித்யையை, இங்குப் பொதுவாக இருந்தபோதிலும் மேலே உதாஹரிக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ பாஷ்யகாரருடைய ஆஜ்ஞையை அனுஸரித்து இது ஸ்ரீ பாஷ்யத்தைக் குறிக்கிறது, **விம்ருஶதி** - விசாரிக்கிறான், **ஸ்வாது** - போக்யமாயிருக்கிற, **ஸவ்யாஹ்ருதாநி** - ஆழ்வார்களின் அருளிச் செயல்களான திவ்ய ப்ரபந்தங்களை, இவ்விடத்தில் 'மதுரமனுதவிய மறைகளும்', '**ஸ்ருதி: ஸாரம் த்ரவிடஜுஷ:**', என்றிவர் தாமே யருளிச் செய்திருப்பதும், 'செவிக்கினிய செஞ்சொல்லே', 'இன்தமிழ்' இத்யாதிகளும் அனுஸந்தேயம், **நித்யம்** - எல்லாக் காலத்திலும், **ப்ரூதே** - சொல்லுகிறான், ஶிஷ்யர்களுக்கும், ஸப்ரும்ம

**உத்தர க்ருத்யத்தின் ப்ராகாரம்.**

இப்படி கூரதகூரதனாய் ஸந்நிஷயைத்தெளிந்து ஶரீரத்தோடிருந்த காலம் பழந்திருவிடை யாட்டத்திலே சிறு திடத்தை யடைத்துக் கொண்டிருப்பாரைப்போலே ஒரு படி துவக்கற் றொருபடி துவக்குண்டிருக்கிற விவ்வதிகாரிக்கு உக்தருடைய கைஜயமுவஸம்வனெபோலே ஸாத்ஶதமாகையாலே ஸ்வயம்

---

சாரிகளுக்கும் என்று சேர்த்துக்கொள்ளவும், **நிஶமயதி வ** — (ஆசார்யர்களிடத்திலிருந்து அல்லது ஸப்ரும்மசாரிகளிடமிருந்து) கேட்கிறான், அதாவது '**வொயபஜஃ வாஸுாம**' என்கிறபடியே ஒருவர்க்கொருவர் சொல்லுகிறார்கள் என்று தாத்பர்யம். இத்தால் மஹா விஸ்வாஸாதி ப்ரயோஜனங்கள் ஸித்தமானாலும் ஸந்தோஷம் முதலியவைகளுக்காக காலக்ஷேப ருசி ஸம்பவிக்கலாம் என்பது தெரிவிக்கப்பட்டது.

'**கூரதகூரதனாய்**' என்பதினால் க்ருதக்ருத்யாதிகாரார்த்தமும், '**ஸநிஷெ**' இத்யாதியால் ஸ்வநிஷ்டாபிஜ்ஞாதிகாரார்த்தமும் அனுவதிக்கப்படுகிறது. **பழந்திருவிடையாட்டம்** - அநாதியாக ஸந்ததி க்ரமமாகவந்ததாய் பகவதாராதனத்திற்குபயோகமான தான்யம் முதலியவைகள் விளையும் பூமி. **சிறு திடத்தை** - ஒரு பாகத்தை. '**அடைத்துக் கொண்டு**' என்பதற்குத் தன்னுடையதாக வைத்துக்கொண்டு, அதாவது பகவதாராதனத்திற்காகத்தனக்கு வேண்டியதான கொஞ்சம் பாகத்தைத்தான் பயிரிடுவதாய் வைத்துக்கொண்டு என்று தாத்பர்யம். **ஒரு படி துவக்கற்று** - ப்ராரப்தத்தின் பலமான ஜன்மாந்தரங்களில் ஸம்பந்தமில்லாமல், **ஒருபடி துவக்குண்டு**-அதில் ஏகதேஶமான ஶரீரத்தில் ஸம்பந்தத்தையுடையவனாய், அன்றிக்கே இந்தஶரீரத்தில் ஸ்வபாவத: ஸம்பந்தமில்லாமல் போனபோதிலும் கர்மத்தினால் காலக்ஷேபாதிகளுக்காகவும் வர்ணாஸ்ரம கர்மானுஷ்டானத்திற்காகவும் ஸம்பந்தத்தை யடைந்து, அதுவுமன்றிக்கே வர்ணாஶ்ரம தர்மங்களில் மூன்றுவிதமான கடன்களை தீர்க்கவேண்டுமென்கிற ஸம்பந்தமில்லாமல் பகவத் ப்ரீத்யர்த்தமாகவென்கிற ஸம்பந்தத்தை யடைந்திருக்கிற. **ஸாத்ஶதமாகையாலே** - மிக

ப்ரயோஜநமாய், ஶாஸ்த்ரவிஹித்தகால விஶேஷநியதமாய், உத்தரகைங்கர்யத்துக்கவஸரஸாதநமாக வுபயகைங்கர்யமும் தலைக்கட்ட வேண்டும்படி சங்கலித்துவக்காய், ஸ்வாமிஸம்ப்ரீதிக்குக் காரணமுமாய், கார்யமுமாய், 1 'வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன்போது' என்றும், 2 'சீர் கலந்த சொன்னினைந்து போக்காரேல்

வும் போக்யமாகையாலே. 'ஶாஸ்த்ரவிஹித' இத்யாதி - ஶாஸ்திரங்களாலே பிரிக்கப்பட்ட காலவிஶேஷங்களுக்குத் தகுந்தபடி ஏற்படுத்தப்பட்டதாய். உத்தர - மேலே செய்யப்போகிற, அவஸர்ஸாதநமாக - ஸமயம் ஏற்பட வேண்டியதற்காக. தலைக்கட்ட - முடித்துக்கொள்ள. சங்கிலித் துவக்காய் - சங்கிலி ஒன்றோடொன்று இடைவிடாமல் ஸம்பந்தப்பட்டிருப்பதைப் போல விச்சேதமில்லாமல் ஸம்பந்தப்பட்டிருப்பதாய். வர்ணாஶ்ரம தர்மங்கள் ப்ரயாஸரூபமாகையாலே அவை ஸ்வயம் ப்ரயோஜனமாகும் ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்—'ஸ்வாமி' என்றாரம்பித்து. ஸ்வாமியான பகவானுடைய ப்ரீதிக்குக் காரணமாகையினால் புருஷார்த்தமாகும் என்று தாத்பர்யம். கார்யமுமாய் - முன்செய்த கார்யத்தினாலுண்டான பகவத்ப்ரீதி இவனைமேலுள்ள நிரபராத கைங்கர்யத்தில் மூட்டுகிறபடியினால் அதினால் உண்டாக்கப்பட்டதாய், அதாவது இந்த ப்ரீதி ஜனகமான கைங்கர்யம் இவனுக்குப் புருஷார்த்தம் என்று தாத்பர்யம். இதில் ப்ரமாணங்களை நிரூபித்தருளுகிறார்—'வாசித்தும்' என்றாரம்பித்து. வாசித்தும் - பகவானுடைய கல்யாணகுணங்களை ப்ரதிபாதிக்கிற ஸ்ரீ ஸூக்திகளைப் படித்தும், கேட்டும் - அயலார் படிக்கக்கேட்டும், வணங்கி - நமஸ்காரம் செய்தும், வழிபட்டும் - இதே மார்க்கத்தில் நடந்தும், அதாவது இதுவே தேஹயாத்திரையாக நடந்தும், பூசித்தும் - திருவாராதனம் செய்தும், போது - காலத்தை, போக்கினேன். சீர்கலந்த - பகவானுடைய கல்யாணகுணங்களை ப்ரதிபாதிக்கிற, சொல் - ஸ்ரீ ஸூக்திகளை, நினைந்து, போக்காரேல் - போக்காதபக்ஷத்தில், சூழ்வினையின் - சூழ்ந்துகொண்

1 நான்-தி-63. 2 பெ-திருவ-86.

சூழ்வினையி னாழ் துயரை யென் னினைந்து போக்கு வரிப்போது' என்றும், 1 'ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டுநாம்' என்றும், 2 'பொங்கேழ் புகழ்கள் வாயவாய் புலன்கொள் வடிவென் மனத்ததா யங்கேய்மலர்கள் கையவாய் வழிபட்டோட வருளில்' என்றும்,

---

டிருக்கிற கர்மங்களினாலுண்டாகிய, ஆழ் - அகாதமான, துயரை- துக்கத்தை. 'ஆழ்'என்று துக்கத்தை ஸமுத்திரமாக நினைத்தருளிச்செய்தபடி, என் நினைந்து-வேறு எதை அநுஸந்தித்து, போக்குவர் — கழிப்பார்கள். ஒழிவில் காலமெல்லாம் - ஒழிவில்லாத காலங்களெல்லாவற்றிலும், உடனாய் - கூடவே இருந்து, மன்னி- (விட்டுப் பிரியாமல்) ஸ்திரமாய் இருந்து, வழுவிலா - விட்டுப் போதல் இல்லாத, அதாவது ஸர்வவிதங்களான, அடிமை-கைங்கர்யம், அன்றிக்கே வழுவிலா - தோஷமில்லாத, அதாவது ஸ்வாதீன ஸ்வார்த்த கர்த்ருத்வாதி தோஷங்களில்லாத என்று ஸ்ரீ ஸாராஸ்வாதிநியில் வ்யாக்யாதம். பொங்கேழ் - 'பொங்கு, எழு', என்கிற இரண்டு பதங்களும் வ்ருத்தியைச் சொல்லுகிற தாகையினால் மேல்மேல் வ்ருத்தி யடையாநிற்கிற என்றர்த்தம், புகழ்கள் - கல்யாணகுணங்கள், வாயவாய் - வாயிலே இருக்குமவைகளாய், அதாவது சொல்லப்பட்டவைகளாய், புலன் - இந்திரியங்களை, கோள்-இழுத்துக்கொள்ளுகிற, வடிவு- திவ்யமங்கள விக்ரஹம், என் மனத்ததாய் - என் மனதிலேயே இருக்கிறதாய், அங்கு - அந்தத் திருமேனியில், ஏய் - அநுரூபமான, அந்தத் திருமேனியில் ஸமர்ப்பிக்கத் தகுந்தவைகளான, மலர்கள் - புஷ்பங்கள், கையவாய் - கையிலே இருக்குமவைகளாய், வழிபட்டோட - இந்த மார்க்கத்திலேயே எப்பொழுதும் இருக்கும்படி, அருளில் - பகவான் க்ருபை செய்தானாகில், ('இங்கே திரிந்தேர்க் கிழுக்குற்றென்' என்று பாட்டின் தலைப்பு, இந்த லோகத்தில் ஸஞ்சரிப்பவர்களுக்குக் குற்றமென்ன). நாடாத - தேடுவதற்கு அஶக்யங்களான, அதாவது துர்லபங்களான, மலர் - புஷ்பங்களை, நாடி - தேடி (பகவா

---

1 திரு-3-3-1. 2 திரு-8-10-4.

1 ‘ நாடாத மலர் நாடி ’ என்றும், 2 ‘வடிவிணையில்லா மலர் மகள் மற்ற நிலமகள் பிடிக்கு மெல்லடியைக் கொடுவினையேனும் பிடிக்க ’ என்றும், 3 ‘ தனக்கே யாக வெனைக் கொள்ளுமீதே ’ என்றும், 4 ‘ உனக்கே நாமாட் செய்வோம் ’ என்றும், 5 ‘பள்ளிகொள்ளு மிடத்தடி கொட்டிடக் கொள்ளுமாகில் ’ என்றும், 6 ‘எண்ணக் கண்டவிரல்கள்’ என்றும், 7 ‘உண்ணு நாள் பசியாவ தொன்றில்லை யோவாதே நமோ நாரணவென் றெண்ணு நாளு மிருக்கெசுச்சாமவேத நாண் மலர் கொண்டுன்

னுடைய திருவடிகளில் ஸமர்ப்பிக்கவேற்பட்டது இந்த ஶரீரம்.) **வடிவு** - ரூபத்தில், **இணையில்லா** - ஸத்ருஶமில்லாத, **மலர்மகள்** - லக்ஷ்மியும், **மற்ற**, **நிலமகள்** - பூமிப் பிராட்டியும், **பிடிக்கும்** - பிடிக்கிற, **மெல்** - ம்ருதுவான, **அடியை** - திருவடியை, **கொடுவினையேனும்** - க்ரூரமான பாபங்களையுடைய நானும், **பிடிக்க** - பிடிக்கும்படி (நீ க்ருபை பண்ணவேண்டும்). **தனக்கேயாக** - தன்னுடைய உகப்புக்காகவே, **எனைக் கொள்ளும்** - என்னை அடிமையாக அங்கீகரிக்கையாகிற, **ஈதே** - இதுவே (நான் பகவானை ப்ரார்த்திக்கும் ப்ரயோஜனம்). **நாம்** - நாங்கள், **உனக்கே**, இத்தால் **ஸ்வார்த்தமாகவல்ல** என்றுஸூசிதம், **ஆட்செய்வோம்** - கைங்கர்யம் செய்யக்கடவோம். **பள்ளிகொள்ளு மிடத்து** - திருக்கண் வளருமிடத்தில், **அடிக்கொட்டிட** - திருவடிகளைப் பிடிக்கும்படி, **கொள்ளுமாகில்** - என்னை அங்கீகரித்துக் கொள்ளுவனாகில். **எண்ணக் கண்ட** - (பகவானுடைய திருநாமங்களை) எண்ணுவதற்காக ஏற்பட்ட, **விரல்கள்**. **உண்ணு நாள்** - சாப்பிடாத நாள், **பசியாவ தொன்றில்லை** - பசியென்பதொன்றில்லை, **ஓவாதே** - இடைவிடாமல், **நமோநாரணவென்று எண்ணு நாளும்** - திருமந்திர ஜபம் செய்யாத நாளும், **இருக்கெசுச் சாமவேத** - ருக், யஜுஸ், ஸாம, என்கிற வேதங்களாகிற, **நாண்மலர் கொண்டு** - அப்பொழுது மலர்ந்த புஷ்பங்களைக் கொண்டு, **உன்**

1 திரு-1-4-9. 2 திரு-9-2-10. 3 திரு-2-9-4.
4 திருப்-29. 5 நா-தி-4-1. 6 பெரி-தி-4-4-3.
7 பெரி-திரு-5-1-6.

பாதம் நண்ணு நாளவை தத்துறுமாகி லன்றெனக் கவை பட்டினி நாள்' என்றும், 1 'நாக்கு நின்னை யல்லாலறியாது நானதஞ்சுவ னென் வசமன்று' என்றும், 2 'வாயவனையல்லது வாழ்த்தாது' என்றும், 3 'தோளவனையல்லால் தொழா' என்றும், 4 'நயவேன் பிறர்பொருளை நள்ளேன் கீழாரோடு' என்றும், 5 'நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டும்' என்றும், 6 'இருளிரிய', 7 'ஊனேறு செல்வத்து', 8 'நீணாகஞ்சுற்றி' என்கிற திரு

பாதம் - உன்னுடைய திருவடிகளை, நண்ணுநாளவை - கிட்டாத, அதாவது கிட்டி ஆராதனம் செய்யாத நாள், தத்துறுமாகில் - நேரிடுமாகில், அன்று - அந்தத் தினத்தில், அவை - அப்படிப்பட்ட நாள்களை, பட்டினி நாள் - பசியோடிருக்கும் தினங்கள். நாக்கு, நின்னையல்லால் - உன்னைத் தவிர வேறொன்றை, அறியாது, நான், அது - அதற்காக, அஞ்சுவன் - பயப்படுகிறேன், அதாவது மிகவும் க்ஷுத்ரனை என்னுடைய நாக்கினால் சொல்லில் உனக்கு என்ன அவத்யம் நேரிடுமோ என்று பயப்படுகிறேன், என்வசமன்று - அந்த நாக்கு எனக்கு வசப்பட்டதன்று. வாய், அவனை அல்லது - அந்தப் பகவானைத் தவிர வேறொருவரை, வாழ்த்தாது - ஸ்தோத்திரம் செய்யாது. தோள் அவனையல்லால், தொழா - ஸேவிக்காது. பிறர் பொருளை - அயலாருடைய வஸ்துக்களை, நயவேன் - (என்னுடையதென்று) ஆசைப்படமாட்டேன், அதாவது உனக்கு சேஷபூதமான ஆத்மாவை என்னுடையதென்றபிமானிக்கமாட்டேன், கீழாரோடு - தாழ்ந்தவர்களோடு, ஆத்மாபஹாரம் செய்தவர்களோடு, நள்ளேன் - ஸ்நேகம் செய்யமாட்டேன். இதனால் அஹங்கார மமகார நிவ்ருத்தி அருளிச் செய்யப்பட்டது. நிரந்தரம் - இடைவிடாமல், நினைப்பதாக- (நான் உன்னை) த்யானம் பண்ணும்படி, நீ, நினைக்கவேண்டும் - ஸங்கல்பிக்கவேண்டும். என்கிற - என்றாரம்பிக்கும். ஹ்ருஜா

1 பெரி-தி-5-1-1. 2 மு-தி-11. 3 மு-தி-63.
4 மு-தி-64. 5 திருச்ச-101. 6 பெருமா-தி-1-1
7 பெருமா-தி-4-1. 8 பெ-தி-11-7.

மொழிகளிலும், 1 'பாஹ்ம: ப்ரஜாநாமைஶ்வர்யம் ஶாம்பவம் வா ந காமயே| அஹம் கதம்போ பூயாஸம் குந்தோ வா யமுநா தடே||' என்றும், 2 'குருஷ்வ மாமநுசரம் வைதர்ம்யம் நேஹ வித்யதே | க்ருதார்தோऽஹம் பவிஷ்யாமி தவ சார்த: ப்ரகல்பதே ||', 3 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத: ஸ்வபதஶ்ச தே', 4 'பரவாநஸ்மி காகுத்ஸ்த த்வயி வர்ஷஶதம் ஸ்திதே | ஸ்வயம் து ருசிரே தேஶே க்ரியதாமிதி மாம் வத ||' என்றும்,

---

பாஹ்ம: - ப்ரும்மாவினுடையவாவது, ஶாம்பவம் (பாஹ்ம:) - ருத்திரனுடையவாவது, ஐஶ்வர்யம் - ஐஸ்வர்யத்தை, ந காமயே - நான் விரும்பவில்லை, அஹம் - நான், யமுநாதடே - யமுனாநதிக்கரையில், கதம்ப: - கடப்பை மரமாகவாவது, குந்த: - கொருக்கத்தி மரமாகவாவது, பூயாஸம் - ஆகக்கடவேன். மாம் - என்னை, அநுசரம் - பின்துடர்ந்து அடிமை செய்பவனாக, குருஷ்வ - செய்துகொள்ளும், இஹ - இந்த விஷயத்தில், வைதர்ம்யம் - உசிதமாக இல்லாமை, ந வித்யதே - இல்லை. அஹம் - நான், க்ருதார்த: - புருஷார்த்தமான கைங்கர்யத்தை அடைந்தவனாக, பவிஷ்யாமி - ஆகப்போகிறேன், தவ - உம்முடைய, அர்த: - ஆஸ்ரிதர்களை உஜ்ஜீவிக்கச் செய்கிறதாகிற ப்ரயோஜனமும், ப்ரகல்பதே - உண்டாகிறது. அஹம் - நான், ஜாக்ரத: - விழித்துக் கொண்டும், ஸ்வபத: - தூங்கிக்கொண்டுமிருக்கிற, தே - உமக்கு, ஸர்வம் - எல்லாக் கைங்கர்யங்களையும், கரிஷ்யாமி - செய்யப்போகிறேன். காகுத்ஸ்த - ஸ்ரீ ராமனே, த்வயி - நீர், வர்ஷஶதம் - அனேகம் வருஷங்கள், ஸ்திதே - இருக்கும்பொழுது, (அவ்வளவு காலமும் உமக்கு) பரவாநஸ்மி - பராதீனனாக இருக்கிறேன், ஸ்வயம் து - நீரே, ருசிரே - அழகான, தேஶே - இடத்தில், க்ரியதாம் - செய்யப்படட்டும், இதி - என்று, மாம் - என்னைக் குறித்து, வத - சொல்லும். ஸர்வஜந்மஸு - எல்லா ஜன்மங்

---

1 2 ராமா-அயோ-31-22. 3 ராமா-அயோ-31-25.
4 ராமா-ஆர-15-7.

1 'காமயே வைஷ்ணவத்வம் து ஸர்வஜந்மஸு கேவலம்' என்றும், 2 'ப்ரவர்த்தமாநஸ்ஸதைவம் பஞ்சகாலிக ப்ரவ்ருத்த்யா । ஸம்பாதிதை: கந்தபுஷ்பாத்யைஶ்ஶாஸ்த்ரஸித்தை: ஶக்த்யநுரூபத: ॥ ஆராதயந் ஹரிம் பக்த்யா க்ஷபயிஷ்யாமி வாஸராந்।' என்றுஞ் சொல்லுகிறபடியே ஸ்வரூபாநுரூபகாலக்ஷேபார்த்தமான வ்ருத்த க்ருத்யமிருக்கும்படி தன் நிஷ்டைக்கநுரூபமாகத்

களிலும், **வைஷ்ணவத்வம் கேவலம்** - விஷ்ணுவுக்கு தாஸனை யிருக்கையை மாத்திரம், **காமயே** - ஆசைப்படுகிறேன். **ஸதா** - எப்பொழுதும், **ஏவம்**-இந்தமாதிரி, **பஞ்சகாலிகப்ரவ்ருத்த்யா**- ஐந்து காலங்களில் செய்யவேண்டிய அபிகமனம் முதலிய வழியால், **ப்ரவர்த்தமாந:** - நடந்துகொண்டு, **ஸம்பாதிதை:** - என்னுல் ஸம்பாதிக்கப்பட்ட, **ஶாஸ்த்ரை:** - ஶாஸ்திர ஸம்மதங்களான, **கந்தபுஷ்பாத்யை:** - சந்தனம் புஷ்பம் முதலியவை களினுல், **ஶக்த்யநுரூபத:** - ஶக்திக்குத் தக்கபடி, **ஹரிம்**- பகவானை; **பக்த்யா**-பக்தியினுல், **ஆராதயந்**-ஆராதனம் செய்து கொண்டு, **வாஸராந்** - தினங்களை, **க்ஷபயிஷ்யாமி** – போக்கப் போகிறேன். **ஸ்வரூபாநுரூப** - ஶேஷபூதனுன தன் ஸ்வரூபத்திற்குத் தகுந்த, இத்தால் தன்னிஷ்டப்படி நடப்பது ஸ்வரூபத்திற்கு உசிதமல்ல என்பது த்யோதிதம். **காலக்ஷேபார்த்தமான** - (தேஹத்துடன் இருக்கும்) காலத்தைக் கழிப்பதற்காக ஏற்பட்ட, இத்தால் இது உபாயத்தோடு ஸம்பந்தப்படாமல் ஸ்வயம் ப்ரயோஜனமானது என்பது தெரிவிக்கப்பட்டது. இருக்கும்படி - கீழ் ப்ரமாணங்களில் நிரூபிக்கப்பட்டிருக்கும் ப்ரகாரத்தை யனுஸரித்து. இதற்கு மேல் '**க்ருதக்ருத்யனாயிருக்கும்**' என்பதோடன்வயம். 'தன் **நிஷ்டைக்கநுரூபமாக**' என்பதினுல் உபாயத்தை யனுஷ்டிப்பதற்காகவேண்டிய ஜ்ஞானத்தை ஸம்பாதிப்பதற்காக இல்லாவிட்டாலும், ஸ்வயம் ப்ரயோஜனமாயிருக்கிற பகவானுடைய குணங்களை யனுபவிப்பதற்குக் காரணமாகையினுல் ஜ்ஞானம் அவஶ்யம் ஸம்பாதிக்கத்தக்கது என்று தாத்பர்யம். தெளிய

1 விஷ்ணு-1-13. 2 லக்ஷ்மீ-நர்ப்பி-சித்த.

தெளியவேண்டு மர்த்தங்களில் தனக்குத் தெளியாத

பகவத் குணாநுஸந்தானம். நிலங்களை நாம் **க்ருதக்ருத**னென் றநாதரித்திராதே **அநுபவ ஸம்ருத்தி**யுண்டாம்போது தெளிவும் **விஶ்வாஸ**மும் வேண்டுகையாலும், 1 '**தத்பக்தி ஜ்ஞானாப்யாம் ஹ்யன்யத் ஃபலம் கதாசன | நயாசேத் புருஷோ விஷ்ணும் யாசனாந் நஶ்யதி த்ருவம் ||**' என்கிறபடியே **ஜ்ஞானபக்தி**களை **யபேக்ஷி**த்தால் குற்றமில்லாமையாலும், தனக்கு **ஶேஷிவிஷய**த்திலே **சித்தரஞ்ஜனம்** பிறக்கைக்காக

பரமைகாந்திகளின் ஸஹவாஸம். 2 'பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகிவந்து' என்னும்படி நிற்கிற தெளிவுடைய **பரமைகாந்தி**கள் பக்

---

**வேண்டும்** - நிஶ்சயமா யறியவேண்டிய. **அநாதரித்திராதே** - உபேக்ஷை செய்யாமல். **அநுபவஸம்ருத்தி** - பகவானுடைய அனுபவம் பூர்ணமாயிருக்கை. **விஶ்வாஸம்** - விஶ்வாஸம். **தத்** - அந்தப் பகவானைப்பற்றிய, **பக்திஜ்ஞானாப்யாம்** - பக்தி, ஜ்ஞானம், இவைகளைத் தவிர, **அன்யத்**-வேறு, **ஃபலம்** - ப்ரயோஜனத்தை, **கதாசன** - ஒரு ஸமயத்திலும், **புருஷ:** - புருஷன், **விஷ்ணும்** - விஷ்ணுவை, **நயாசேத்**- யாசிக்கக்கூடாது, **யாசனாத்** - யாசிப்பதினால், **நஶ்யதி** - நாஶமடைகிறான், **த்ருவம்** - நிஶ்சயம். **சித்தரஞ்ஜனம்** - மனதிற்கு ப்ரீதி. **தத்** - அந்த ஆத்ம தத்வத்தை, ('**அவிநாஶி து**' என்றாரம்பித்து சொல்லப்பட்ட தத்வார்த்தத்தை), **ப்ரணிபாதேன** - நன்றாக ஸேவிப்பதினாலும், **பரிப்ரஶ்னேன** - பரீக்ஷைக்குக் கேட்பதைப்போலல்லாமல் விநயத்துடன் கேட்பதினாலும், **ஸேவயா** - ஶுஶ்ரூஷையினாலும், **வித்தி**-அறிந்துகொள், **தத்வதர்ஶின:** - வாஸ்தவார்த்தத்தை அறிந்தவர்களான, **ஜ்ஞானின:** - ஜ்ஞானிகள், **தே** - உனக்கு, **ஜ்ஞானம்** - ஆத்ம ஸ்வரூபத்தைப்பற்றிய ஜ்ஞானத்தை, **உபதேக்ஷ்யந்தி**-உபதேஶம் செய்வார்கள். '**கட்டளையிலே**' என்பதற்கு இந்த ப்ரமாணத்தில்

---

1 2 37-ம் பக்கம் பார்க்க.

கலிலே 1 'தத்வித்தி ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா | உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்வதர்ஶிந: ||' என்கிற கட்டளையிலே தெளியக்கேட்டு, 2 'உதாஸீநோ'ப்யச்சதாமேதி ஸம்பர்க்கேண விபஶ்சித: | ப்ரஸந்ந: கதகஸ்யேவ நிகர்ஷேணாவிலம் பய: ||' என்கிறபடியே விஶதஜ்ஞானனாய், 3 'யஸ்யாநுபவபர்யந்தா புத்திஸ் தத்வே ப்ரதிஷ்டிதா | தத்த்ருஷ்டிகோசரா: ஸர்வே முச்யந்தே ஸர்வகில்பிஷை: ||' என்கிறபடியே யிவ்வர்த்தங்களில் நிஷ்டையுடையவர்களுடனே நெருங்கி வர்த்தி

---

சொல்லப்பட்டிருக்கும் ப்ரணிபாதாதிகளை முன்னிட்டுக்கொண்டு என்றர்த்தம். அன்றிக்கே தான் உபதேஶித்த வர்த்தத்தையே பல ஜ்ஞானிகளிடத்தில் கேட்கும்படி ஸ்ரீ கீதாசார்யன் விதித்திருக்கிறபடியிலே தான் க்ருதக்ருத்யனென்று உபேக்ஷிக்காமல் ஜ்ஞானிகள் பக்கல் கேட்கவேண்டுமென் றேற்படுகிற படியே என்று தாத்பர்யமாகவுமாம். **உதாஸீ**-மூடனும், **விபஶ்சித:** - புத்திமானுடைய, **ஸம்பர்க்கேண** - ஸம்பந்தத்தினால், **ப்ரஸந்ந:** - கலக்கத்தைப் போக்கடிக்கிற, **கதகஸ்ய** - தேத்தாங் கொட்டையினுடைய, **நிகர்ஷேண** - தேய்ப்பதினாலே, **ஆவிலம்** - கலங்கின, **பய இவ** - ஜலம்போல, அதாவது அந்த ஜலம் தெளிவை அடைவதைப்போல, **அச்சதாம்** - பண்டிதனாயிருக்கையை, **ஏதி** - அடைகிறான். **விஶதஜ்ஞானனாய்**-ஸம்ஶயாதிகளில்லாத ஜ்ஞானத்தை யுடையவனாய். **யஸ்ய** - எவனுக்கு, **தத்வே** - தத்வத்தில், **புத்தி:** - புத்தியானது, **அநுபவபர்யந்தா** - அனுபவம் வரையிலாக, **ப்ரதிஷ்டிதா**-நிலை நின்றிருக்கிறதோ, அதாவது ப்ரயோஜனத்தில் முடிவு பெற்றிருக்கிறதோ, இத்தால் ஶாஸ்திரார்த்தத்தை அறிவது அனுஷ்டானத்தில் முடிவுபெற்றிருக்கிறது என்பது த்யோதிதம், **தத்த்ருஷ்டிகோசரா:** - அப்படிப்பட்டவனுடைய கடாக்ஷங்களுக்கு விஷயங்களான, **ஸர்வே** - எல்லா ப்ராணிகளும், **ஸர்வகில்பிஷை:** - எல்லாப் பாபங்களினாலும், **முச்யந்தே** - விடப்படுகிறார்கள். '**அர்த்தங்களில் நிஷ்டை**' யாவது தத்வங்

---

1 கீதை-4-34. 2 3 ஸ்ரீஸாத்வதம்.

த்து, அவர்களநுஷ்டாநங்களில் 1 'யாவாநர்த்த உ
தபாநே ஸர்வத ஸம்ப்லுதோதகே' என்கிற ந்யாயத்
திலே தன் வர்ணாச்ரம ஜாதி குணாதிகளுக்கநு
ரூபமான கர்த்தவ்யாம்சத்தை நிஷ்கர்ஷித்துத் தநுஷ்டி
த்து, இவ்வநுஷ்டாநாதிகளை யுடையோ மென்னும்
ஹாவனையடியாக வரும் ஸௌக்ஷ்ம வ்ருநிகர்ஷ்
நுஸந்தாநங்களாகிற படுகுழிகளைத் தப்பும்படி தான்
முன்னடி பார்த்து நடக்கவும், தனக்கு பகவ வ்ரு

கார்பண்யானு ஸந்தானம்.

ஸாத விசேஷ ரூபமாக நம்மாழ்வார் நாதமுநிக
ளுள்ளிட்டார்க்குப்போலே ஸாக்ஷாத்காராதிகளாகிற
ஸமோதவர்த்தங்கள் வந்தாலும், 2 'நன்மை தீமைக
ளொன்று மறியேன்' என்றும், 3 'அறிவனே லும்

களில் உறுதியான நிஸ்சயரூபமான ஜ்ஞானமும், அதில் சொல்லிய
உபாயங்களில் அனுஷ்டானமும். நெருங்கிவர்த்தித்து - கூடவே
இருந்துகொண்டு. ஸர்வத:-எல்லா இடத்திலேயும், ஸம்ப்லு
தோதகே-ஜலம் நிறைந்த, உதபாநே-குளம் முதலியவற்றில்,
(தாகமுடையவனுக்கு) யாவாநு - எவ்வளவு, அர்த்த:-ப்ரயோ
ஜனமோ (அவ்வளவே க்ரஹிக்கப்படுகிறது, அதைப்போ
லவே எல்லா வேதங்களிலும் தனக்கு ப்ரயோஜனமானவற்றை
மாத்திரம் அங்கீகரித்துக்கொள்ள வேண்டும்). ந்யாயத்திலே
அந்த ந்யாயத்தினாலே, ஹாவனை - எண்ணம் (அபிமானம்)
ஜாதி - கோத்திரம், 'படுகுழி'யாவது-மேலில் நல்லவழியைப்போ
லத் தோன்றி நடப்பவர்களைக் கீழே தள்ளும் பள்ளம். அதாவது
அதைப்போல இவர்கள் அனுஷ்டானமும் மேலில் நன்றாயிருந்
தாலும் இந்த அபிமானங்களோடிருந்தால் கீழே விழப் பண்ணும்
என்று தாத்பர்யம், தப்பும்படி - தாண்டும்படி, முன்னடி பார்த்து
தானடிவைக்கு மிடத்தை முன்னாலேயே பார்த்து, அதாவது
ஸாவதானமாய். 'பகவ' இத்யாதி-பகவானுடைய விசேஷ
க்ருபையினாலே, உள்ளிட்டார் - முதலியவர்கள். ஸமோதவ
வர்த்தங்கள் - பலம் உண்டாகும் வரிசைகள், நன்மை

1 கீதை-2-46. 2 பெரி-தி-5-1-3. 3 பெரி-திருவ-3.

வை யெல்லா மென்னு லடைப்பு நீக்கொணு' என்றும் நிரூபித்து, வராயீந ஸ்ர்வெஷூதி ஹூவரூதியான தன்னயிகாரத்திலே சொருகின வாகிஞநூத்தை யழியமாருதே, 1 'ஸுஹஉஷூவராயாநா ஊருயொகிஞ மொமதி:' ஐதஹ்ரிகளை யடியொத்தி நடக்கிற 2 'நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்', 3 'என்னுன் செய்கேன்', 4 'களைவாய் துன்பங் களையா தொழிவாய் களைகண் மற்றிலேன்', 5 'புகலொன்றில்லா வடியேன்', 6 'ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்', 7 'கறைவகள் பின்சென்று', 8 'குளித்து மூன்றனலையோம்பும்', 9 'குல

புண்யம், தீமைகள் - பாபங்கள், ஒன்றுமறியேன் - இவைகள் ஒன்றையும் அறியமாட்டேன், அறிவனேலும் - இவைகளைத் தெரிந்துகொண்டாலும், இவையெல்லாம் - இந்த நன்மைதீமைகளெல்லாம், என்னுல், அடைப்பு - அடைவதற்கும், நீக்கு - தள்ளுவதற்கும், ஒண்ணுது-முடியாது, ஹூவரூதியான - ப்ரவ்ருத்திகளை யுடையவனுன, சொருகின-உள்ளடங்கி யிருக்கிற, அழியமாருதே - அழியும்படி விலக்காமல், அடியோத்தி - அனுஸரித்து, அதாவது அதே அர்த்தங்களை ப்ரதிபாதிக்கிற. நோற்ற - என்னுல் செய்யப்பட்ட, நோன்பிலேன் - வ்ரதமில்லாதவன், அதாவது கர்மயோகமில்லாதவன், நுண் - ஸூக்ஷ்மமான, அதாவது ஆத்மஸ்வரூபத்தைப் பற்றிய, அறிவிலேன் - ஜ்ஞானமில்லாதவன், அதாவது ஜ்ஞானயோகமில்லாதவன். நான் - அத்யந்தம் பராதீனனுன நான், என்செய்வேன். துன்பம் - துக்கத்தை, களைவாய் - போக்கடிப்பாய், களையாதொழிவாய் - போக்கடிக்காமல் போவாய், மற்று - வேறு, களைகண் - ரக்ஷகன், இலேன். 'கறைவகள் பின்சென்று' என்கிற பாட்டில் 'அறிவொன்றுமில்லாத வாய்க்குலத்து' என்று ஆகிஞ்சந்யம் அனுஸந்திக்கப்பட்டது. குளித்து - ஸ்நானம் செய்து, மூன்றனலை - மூன்றக்னிகளை, ஓம்பும் - (ஹவிஸ்ஸுக்களினுல்) பரிஸ்ருக்ஷை செய்வதா

1 389-ம்-பக்கம் பார்க்க. 2 திரு-5-7-1. 3 திரு-5-8-3.
4 திரு-5-8-8. 5 திரு-6-10-10. 6 திரு-10-10-3.
7 திருப்-28. 8 திருமாலை-25. 9 திருச்ச-90.

ங்களாய வீரிரண்டில்', 1 'ஏழை யேதிலன்', 2 'பற்றேலொன்று மிலேன்', 3 'தருதுயரந் தடாயேல்' என்கிற பாட்டுக்களிலும், 4 'ந தர்மநிஷ்டோஸ்மி' என்கிற ஶ்லோகத்திலும், இவர்க ளருளிச் செய்த கார்பண்யத்தின் கவடுகளை யெல்லா மவலம்பித்துக்கொண்டு போரவும், இப்படித் தனக் கநாதிகாலமும் பிறந்த வாஸநத்தையு மதடியாக விழந்த ஸௌஜந்யத்தையும் பார்த்து 5 'பொய்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கு மழுக்குடம்பும்' என்றலற்றப் பண்ணும் நிர்வேத ப்ராசுர்யத்தாலே யவஸந்நனாகாதே, 5 'உயிரளிப்பா னென்னின்ற யோனியுமாய்ப் பிறந்

கிற (ஸாவதானத்தோடு நடக்கவேண்டிய ப்ராம்மண்ய கர்மத்தை ஒளித்துவிட்டேன்). குலங்களாய - நல்ல குலங்களான, ஈரிரண்டில் - நான்கு வர்ணங்களிலும் (பிறக்கவுமில்லை, நல்ல வித்யைகளையும் அப்யாஸம் செய்யவுமில்லை). பற்றேல் - அவலம்பனமோ வென்னில், ஒன்றுமிலேன் - ஒன்றுமில்லாதவன். ஏழை - சபல புத்தியை யுடையவன், ஏதிலன் - சத்ரு. ந தர்மநிஷ்டோஸ்மி - தர்மத்தில் நிஷ்டையையுடையவ னல்லேன். இவர்கள் - இந்த ஆசார்யர்கள், கவடுகள் - உட்பிரிவுகள். இப்படிக் கார்ப்பண்யம் பல ரூபமாக உத்தர காலத்திலும் அநுஸந்தேயமாகில் தன் அயோக்யதாதிகளைப் பார்த்து அகன்று போகும்படி நேரிடுமேயன்றி பகவத் கைங்கர்யாதிகளுக்கு ப்ராப்தி யுண்டாகும்படியாகுமோ என்னில்? அருளிச்செய்கிறார்—' இப்படி ' என்றாரம்பித்து. பொய்நின்ற - பொய்யாக உண்டாகிய, ஞானமும் - தேஹாத்ம ப்ரமமும், பொல்லா வொழுக்கும் - அதினாலுண்டாகிய தோஷத்தோடு கூடிய நடவடிக்கையும், அழுக்குடம்பும் - அதினாலுண்டாகிய மலமயமான ஶரீரமும். நிர்வேதம் - தன்னை இகழ்ந்து கொள்ளுதல். அவஸந்நனாகாதே - ஒரு கார்யத்தையும் செய்ய யோக்யதை யில்லாதபடி தளர்ந்து போகாமல். உயிரளிப்பான் - ஜீவாத்மாக்களை ரக்ஷிப்பதற்

1 பெ-தி-5-8-1. 2 திரு-1-9-8. 3 பெருமா-தி-5-1.
4 ஆள-ஸ்தோ-22. 5 திருவிரு-1.

தா யிமையோர் தலைவா' என்கிறபடியே யெதிர்சூழல் புக்கு நிற்கிற ஶரண்யனுடைய தாய் முலைப்பால் போலே ஸமஸ்தமுமாய் வ்யஸ்தமுமான உபதேஶத்தாலே தெளிந்த அவதார ரஹஸ்யாதிகளாகிற தீர்த்தங்களை அவகாஹித்துத் தேறி', 1 'உத்தரே சேத் வயஸி ஸாதுவ்ருத்த:' என்றும், 2 'துராசாரோऽபி ஸர்வாஶீ க்ருதக்நோ நாஸ்திக: புரா। ஸமாஶ்ரயேதாதிதேவம் ஶ்ரத்தயா ஶரணம் யதி॥ நிர்தோஷம் வித்தி தம் ஜந்தும் ப்ரபாவாத் பரமாத்மந:॥' என்றும், 3 'யச்ச ஸ்ருஷ்ட்வா நி

---

காக, என்னின்ற - எந்தெந்த விதமா யிருக்கிற, **யோனியுமாய்** - ஜாதியாக, **பிறந்தாய்** - அவதரித்தருளினாய், **இமையோர்தலைவா** - நித்ய ஸூரிகளுக்கெல்லாம் தலைவனானவனே. **எதிர் சூழல்** - எதிரே வந்து வளைப்பதற்காக, **புக்கு** - ப்ரவேஶித்து, **உபதேஶத்தாலே** - 'பஹூநி மே வ்யதீதாநி' என்றாரம்பிக்கும் உபதேஶம் முதலியவைகளினாலே, '**சுழி**' பதத்தினால் கல்யாண குணங்கள் விவக்ஷிதங்கள். **தீர்த்தங்கள்** - உபாயத்திற்கு விரோதங்களான பாபங்களைப் போக்கடிக்கக் கூடியவைகள். **அவகாஹித்து** - ஸ்நானம் செய்து, அதாவது அவைகளை ஸர்வதா அநுஸந்தானம் செய்து, தேறி-(நான் அநர்ஹன் என்கிற அநுஸந்தானத்தினாலுண்டாகிய அவஸாதத்தை விட்டுத்) தைர்யத்தை யடைந்து. **உத்தரே வயஸி** - மேல் வயஸில், **ஸாதுவ்ருத்தஶ்சேத்** - நல்ல நடவடிக்கை யுடையவனா யிருந்தால், **புரா** - முன்பு, **துராசார:** - கெட்ட நடவடிக்கையோடு கூடினவனையும், **ஸர்வாஶீ** - எல்லாம் ஸாப்பிடுகிறவனையும், **க்ருதக்ந:** - க்ருதக்னனையும், **நாஸ்திக:** - நாஸ்திகனையும், **அபி** - இருந்த போதிலும், **ஶ்ரத்தயா** - ஶ்ரத்தையினாலே, **ஆதிதேவம்** - பகவானை, **ஶரணம்** - ஶரணமாக, **ஸமாஶ்ரயேத்** - ஆஶ்ரயிப்பானேயானால், **தம் ஜந்தும்** - அந்த ப்ராணியை, **பரமாத்மந:** - பகவானுடைய, **ப்ரபாவாத்** - மஹிமையினால், **நிர்தோஷம்** - தோஷமில்லாதவனாக, **வித்தி** - அறி. **யச்** - எந்

1 போ-ஸ-14-10. 2 ஸாத்-ஸ-16-23. 3 ஸை-ஸ்த-61.

யுதாநுபவேऽப்யநாஶ்யம் தத்கில்பிஷம் ஸ்ருஜதி ஜந்து ரிஹ க்ஷணார்த்தே| ஏவம் ஸதா ஸகலஜந்மஸு ஸாபராதம் க்ஷாம்யஸ்யஹோ ததபிஸந்திவிராமமாத்ராத்|| என்றும், 1 'ப்ரவஹத்யேவ ஹி ஜலே ஸேது: கார்யோ விஜாநதா' என்றும், 2 'மாளுமோரிடத்திலும் வணக்கொடு மாள்வது வலமே' என்றும் சொல்லுகிற ந்யாயத்தாலே கதத்துக்கு ஶோகியாதே கதமான வயோக்யதையைக் கண்டகலவும் பாராதே அவ்யாஜமான யதாவஸ்திதமான ஶரண்ய ப்ரஸா வத்தாலே யிப்போது பிறந்த யோக்யதையைக்கண்டு வருகிற நீருக்கணைகோலுங் கணக்கிலே யிவ்வவஸ்தைக் கநுரூபமான வாஜ்ஞாநுஜ்ஞாநுவர்த்தந மாகிற கைங்கர்யாநுபவத்தை யிழவாதே, 3 'முடியா'னில்படியே விடாய்த்த கரணங்களை ஸாக்ஷிகா

---

தப் பாபம், ப்ரஹ்மகல்ப நியுத - லக்ஷம் ப்ரும்ம கல்பங்களில், அநுபவேऽபி - அனுபவித்தாலும், அநாஶ்யம் - நாஶத்தை யடைவிக்கமுடியாதோ, தத் கில்பிஷம் - அப்படிப்பட்ட பாபத்தை, ஜந்து: - ப்ராணி, இஹ - இந்த லோகத்தில், க்ஷணார்த்தே - அரை க்ஷணத்தில், ஸ்ருஜதி - செய்கிறது, ஏவம் - இப்படி, ஸதா - எப்பொழுதும், ஸகலஜந்மஸு - எல்லாஜ் ஜன்மங்களிலும், ஸாபராதம் - அபராதத்தோடு கூடின ப்ராணியை, ததபிஸந்திவிராமமாத்ராத் - (அந்தப் பாபங்களில்) அபிஸந்தியின் ஓய்வினால் மாத்திரம், க்ஷாம்யஸி - பொறுத்து விடுகிறீர், அஹோ - ஆஸ்சர்யம். விஜாநதா - புத்திமானால், ஜலே - ஜலமானது, ப்ரவஹத்யேவ - வந்துகொண்டிருக்கும்பொழுதே, ஸேது: - அணை, கார்ய: - செய்யத்தக்கது. மாளுமோரிடத்திலும் - மரணமடையும் காலத்திலும், வணக்கொடு - ஒரு அஞ்ஜலியோடு, மாள்வது - நஶிப்பது, வலமே - பலமானது. கதத்துக்கு - கழிந்ததற்கு. 'முடியா'னில்படியே இத்யாதிக்கு 'முடியானே' என்றாரம்பிக்கும் திருவாய்மொழியில்

---

1 வஹ்நி-ஸித்யர். 2 திரு-1-3-8. 3 திரு-3-8-1.

ஹார ஸௌவாதிகளாலே யோக்யங்களாக்கி ஸாதநங்களான ஸகலஹவங்களிலே மூட்டி அயோக்ய விஷயாந்தரங்களில் பட்டி புக்க வாஸநைகளை மாற்றுவிக்கவும், அக்கரையி லவிச்சேதஷேமத்துக்குப்போக ஓடம்

---

ஆழ்வார் தம்முடைய கரணங்கள் ஒன்றொன்றும் மற்றக் கரணங்களின் அனுபவத்தைப் பகவத் விஷயத்தில் ஆசைப்பட்டன என்றருளிச் செய்திருக்கிறப்போலே என்று தாத்பர்யம். **அகல** - பிரிந்துபோக, **விடாய்த்த** - பகவதனுபவத்தில் மிகுந்த த்வரையையுடைய. **'ஸூரி'** ஶப்தம் விவேகாதிகளைக் குறிக்கிறது. **'யோக்யங்களாக்கி'** என்பதோடு பகவத் கைங்கர்யங்களுக்கு என்று சேர்த்துக்கொள்ளவும். **'ஸகலஹவங்கள்'** என்றது அத்தால் உண்டாக்கப்பட்ட கைங்கர்யத்திற்கும் உபலக்ஷணம், அதாவது ஏற்கனவே இந்திரியங்கள் பகவானிடத்தில் ஆசையுடையவைகளாயிருந்த போதிலும் அஸாத்விகமான ஆஹாராதிகளை அங்கீகரித்தால் அதினால் வ்ருத்தி செய்யப்பட்ட ஶரீரேந்திரியங்கள் பகவதனுபவாதிகளுக்கு யோக்யங்களாகாது என்று தாத்பர்யம். **அயோக்ய**-ஸ்வரூபத்திற்குத் தகாதவைகளான, **பட்டிபுக்கவாஸநை**-திருட்டுத்தனமாய் மேய்ந்து கொண்டிருந்த பழக்கத்தினால் உண்டான வாஸநை, அதாவது ஸ்வேச்சையாக இந்திரியங்கள் விஷயங்களில் திரியும் வாஸநை என்று தாத்பர்யம். இப்படி ஸாத்விகாஹார ஸேவை, அதினால் இந்திரிய ஜயம், அதினால் பகவதனுபவம், இவைகள் அவஶ்யம் செய்ய வேண்டியதாக ஏற்பட்டால் இந்திரிய ஜய பகவதனுபவங்கள் இந்த ஜன்மத்தில் உண்டாகாத பக்ஷத்தில் அதற்காக அடுத்த ஜன்மம் அங்கீகரிக்க வேண்டிய தவஶ்யமாகையினால் இந்தத் தேஹத்தின் முடிவிலே மோக்ஷத்தை ப்ரார்த்தித்திருப்பது விரோதியாதோ? விஷயாந்தரங்களில் இந்திரியங்கள் செல்லாமலிருப்பதற்கு மாத்திரம் பகவத் கைங்கர்யாதிகளைச் செய்ய வேண்டும் என்னில் ஶாஸ்திர வஶ்யனாய் செய்யவேண்டுமென்பது அநுபயுக்தமன்றோ? என்கிற ஶங்கைகளுக்கு ஸித்தாந்தமாகப் பரிஹாரம் அருளிச் செய்கிறார்—'அக்கரையில்' என்றாரம்பித்து. 'அக்கரை' என்பது 'அவிச்சேதஷேமத்துக்கும்'

பார்த்திருப்பார் நினைத்தபோது விடவொண்ணாத **வணவஸூத்ரூதத்தி** லிழியாதே வேண்டின மட்டிலே தலைக் கட்டுகைக் கீடான **விஹாரஸூத்ரூதத்திலே** யிழிந்தாலும் **ஸூத்ரூதஶாஸ்த்ர**த்தின்படியே யடி தப்பாதே கருவி வைக்குமாப்போலே **ஆஜ்ஞாநுஜ்ஞைகளாலே** யடிமை கொள்ளுகிற **ஶாஸிதாவி**னுடைய **ஶாஸநத்**துக்குப் பொருந்தின **காலவிஶேஷாதி** நிய

---

'ஓடத்துக்கும்' விஶேஷணம். **அக்கரையிலோடம் பார்த்திருப்பார்** - அக்கரையிலிருக்கும் ஓடம் இக்கரை வருமட்டும் பார்த்திருப்பவர்கள், **விட வொண்ணாத** - நிறுத்தமுடியாத, **வணவஸூத்ரூதம்**-பந்தயம் வைத்து ஆடும் சொக்கட்டான் முதலிய விளையாட்டு, **தலைக்கட்டுகைக் கீடான** - முடிப்பதற்குத் தகுந்த, **விஹாரஸூத்ரூதம்** - காலம் கழிப்பதற்காக மாத்திரம் ஆடும் சொக்கட்டான் முதலியது. **இழிந்தாலும்** - ஆரம்பித்தாலும். இத்தால் தேஹாந்தராதிகளில் வரக்கூடிய பலம் இவனுக்கு அபேக்ஷிதமல்லாமையாலே இந்தத் தேஹத்தின் முடிவு காலம் வருகிற வரையில் யதாஶக்தி யனுஷ்டிக்கலாமாகையினால் இந்தத் தேஹத்தின்முடிவிலே என்றுப்ரார்த்தித்ததோடு விரோதிக்காது என்று ஸமாதானம் அருளிச்செய்யப்பட்டதாயிற்று. '**ஸூத்ரூதஶாஸ்த்ர**'மாவது சதுரங்கம், முதலிய ஆட்டங்களில் கருவிகளை நடத்தும் ப்ரகாரத்தை நியமிக்கும் ஶாஸ்திரம். **கருவிகள்** - சதுரங்கம் முதலிய ஆட்டங்களில் உபயோகிக்கும் காய்கள், ப்ரதிமைகளாகவுமாம். **அடி தப்பாதே** - யானை குதிரை முதலிய காய்களை நடத்தவேண்டிய மார்க்கம் தப்பாமல். இத்தால் அந்தந்தப் பலங்களுக்காக வல்லாமல் நித்ய நைமித்திகாதிகளை காலக்ஷேபார்த்தமாகச் செய்தாலும் ஶாஸ்திர ப்ரகாரம் நடத்தவேண்டும் என்பது தெரிவிக்கப்பட்டதாகிறது. **ஶாஸிதா** - நியந்தாவாகிய பகவான், **ஶாஸநத்துக்கு** - ஆஜ்ஞாரூபங்களான ஶாஸ்திரங்களுக்கு. **காலவிஶேஷாதி நியதமான** - அந்தந்தக் காலங்களில் செய்யவேண்டியதாக ஏற்படுத்தப்பட்ட. ஒருபலத்திற்காகச் செய்யாமல் ஸ்வயம் ப்ரயோஜனமாய்ச் செய்யவேண்டுமென்றருளிச்செய்கிறார்—'**விதேவஶிஹாராயஒ**' என்றும்

தமான கைங்கர்யத்தை பித்தபரிஹாரார்த்தமாக க்ஷீரஸேவை பண்ணுவாரைப் போலன்றிக்கே ஸ்வய த்ருஜுமான விஷயத்தாலே யதிஜம்விதமாக வாரோக்யமும் பெற்றவர்கள் பால்வார்த் துண்ணுமாப் போலே யுகந்து பண்ணவும், அப்போது 1 'நித்யஸித்தே ததாகாரே தத்பரத்வே ச பௌஷ்கர | யஸ்யாஸ்தி ஸத்தா ஹ்ருதயே தஸ்யாஸௌ ஸந்நிதிம் வ்ரஜேத் ||' என்றும், 1 'யதா ஸாகரஜம் அம்போ அபிமேகை: ஸ்ப்ருஷ்டமேத்ய

அர்ச்சாவதாரம் கைங்கர்யத்திற்கு உத்தேஶ்யம்.

---

பித்து. ஸேவைபண்ணுவார் - ஸாப்பிடுமவர்கள். இப்படிப் பகவானுடைய அனுபவங்களும் கைங்கர்யங்களும் செய்யவேண்டிய தவஸ்பமாகில் பகவானுடைய பரரூபாதிகளும் விபவாவதாரங்களும் காலத்தாலும் தேஶத்தினாலும் நமக்குக் கிட்டாமலிருக்கின்றனவே? என்கிற ஶங்கைக்குப் பரிஹாரமாக அப்படிப்பட்ட தோஷங்களொன்று மில்லாத அர்ச்சாவதாரத்தில் அவைகளைச் செய்யவேண்டுமென் றருளிச் செய்யப்போகிறவராய் அதில் கீழ்க்கூறிய பரவிபவாதிகளில் உள்ள குணபூர்த்திகளுண்டென்பதற்கு ப்ரமாணங்களை நிரூபித்தருளுகிறார்—'நித்ய' என் றாரம்பித்து. பௌஷ்கர - ஓ! ப்ரும்மாவே, நித்யஸித்தே - எப்பொழுதும் ஏற்பட்டதாகிய, ததாகாரே - அந்தப் பகவானுடைய ஆகாரத்திலும், தத்பரத்வே - அந்தப் பகவான் ஸர்வோத்க்ருஷ்டன் என்பதிலும், அன்றிக்கே இந்த ரூபம் ஸர்வோத்க்ருஷ்டமென்பதிலும், யஸ்ய - எவனுடைய, ஹ்ருதயே - மனதில், ஸத்தா - (அவைகள்) உண்டு (என்கிற புத்தி), அஸ்தி - இருக்கிறதோ, தஸ்ய - அந்தப் புருஷனுக்கு, அஸௌ - இந்தப் பகவான், ஸந்நிதிம் - ஸமீபத்திலிருப்பதை, வ்ரஜேத் - அடைவான், அந்த விக்ரஹாதிகளுடன் கூட ஸமீபத்தை யடைவான் என்றபடி. ஸாகரஜம் - ஸமுத்திரத்தினுடைய, அம்ப: - ஜலம், அபிமேகை: - மேகங்களால், ஸ்ப்ருஷ்டம் - தொடப்பட்டதாய், அதாவது ஸ்பர்சிக்கப்பட்டதாய், உபபோக்யதாம் - அனு

---

1 பௌஷ்கரம்.

வஹோஹ்ருதாம் | ததைவ ஹி மநுஷ்யாணாம் பக்தை ஸம்பாவிதோ ஹரி:||’ என்றுஞ் சொல்லுகிறபடியே ஓரதிகாரி விசேஷத்துக்காக ஸாந்நித்யாதிகளைப் பண்ணி ஸர்வேச்வரனான தன்னை யுகந்துவந் தவதாரம் பண்ணியிருக்கிற வெம்பெருமான் பக்கலிலே 1 ‘ஸர்வாதிசாயி ஷாட்குண்யம் ஸம்ஸ்திதம் மந்த்ர பிம்பயோ:’ என்கிற ஸம்ருத்தியையும், 2 ‘ஆபீடாந்மௌளிபர்யந்தம் பச்யத: புருஷோத்தமம் | பாதகாந்யாசு

---

பவிக்கக்கூடியதா யிருக்கையை, யதா - எப்படி, வஹதி - அடைகிறதோ, ததைவ - அப்படியே, பக்தை: - பக்தர்களினால், ஸம்பாவித: - கொண்டாடப்பட்டிருக்கிற, ஹரி: - பகவான், மநுஷ்யாணாம் - மனுஷ்யர்களுக்கு (கைங்கர்யாதிகளுக்கு உத்தேஶ்யமா யிருக்கைக்குத் தகுந்தவனாகிறான்). ஓரதிகாரி - தேவதைகள், ருஷிகள், பராங்குச பரகாலாதி ஆசார்யர்கள், ‘ஸாந்நித்யாதி’ என்பதோடு அர்ச்சாவிக்ரஹத்தில் என்றுசேர்த்துக்கொள்ளவும். ‘தன்னை யுகந்துவந்து’ என்பதற்கு அந்தப் பூர்வாசார்யாதிகளுக்காக முன் ஸாந்நித்யாதிகளைப் பண்ணின போதிலும் அது முதல் இதுவரையிலாகப் பகவான் ஸாந்நித்யம் செய்திருப்பது தன்னுடையவும் தன்னைப்போன்ற மற்றப்பரமை காந்திகளுடையவும் ஆராதனத்தை அங்கீகரிப்பதற்காக என்று தாத்பர்யம். இது க்ருஹார்ச்சையைக் குறிக்கிறதென்று ஸ்ரீஸாரஸ்வாதினியில் வ்யாக்யாதம். மந்த்ர பிம்பயோ: - மந்திரமும் பிம்பமும் சேர்ந்திருக்கு மிடத்தில், அதாவது மந்திரத்தினால் பிம்பத்தில் ப்ரதிஷ்டை பண்ணப்பட்டு ஸாந்நித்யத்தை யடைந்திருக்கும் பகவானிடத்தில், ஸர்வாதிசாயி - பரரூபம் முதலியவைகளைக் காட்டிலும் மேற்பட்ட, ஷாட்குண்யம் - ஜ்ஞானசக்த்யாதி ஆறு குணங்களும், ஸம்ஸ்திதம் - இருக்கிறது. ஸம்ருத்தி - குணங்களின் நிறைவு. ஆபீடாத் - திருவடிகளுக்கு ஆதாரமாகிய பீடம் முதல், மௌளிபர்யந்தம் - கிரீடம் வரையிலும், புருஷோத்தமம் - (அர்ச்சாரூபியான) புருஷோத்தமனை, பச்யத: - பார்க்கிறவனுக்கு, பாதகாநி - மஹா பாதகங்களும்,

---

1 விஷ்-ஸம். 2 பாஞ்-ஸம்-2-84.

𑌨𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌕𑌿𑌂 𑌪𑍁𑌨𑌰𑍁𑌪𑌪𑌾𑌤𑌕𑌮𑍍॥' என்கிற 𑌪𑌾𑌪𑌨𑍋𑌦𑌕𑌤𑍍𑌵த்தையும், 1 '𑌸𑌨𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌦𑌕𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌚 𑌪𑍁𑌂𑌸𑌾𑌂 𑌸𑌂𑌮𑍋𑌹𑌶𑌾𑌲𑌿𑌨𑌾𑌂। 𑌕𑍁𑌵𑌾𑌸𑌨𑌾 𑌕𑍁𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌶𑍍𑌚 𑌕𑍁𑌤𑌰𑍍𑌕𑌨𑌿𑌚𑌯𑌃 ॥ 𑌕𑍁𑌹𑍇𑌤𑍁𑌶𑍍𑌚 𑌕𑍁𑌭𑌾𑌵𑌶𑍍𑌚 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌕𑌤𑍍𑌵𑌂 𑌲𑌯𑌂 𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍।' என்கிறபடியே 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌦𑌿 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌤𑍍𑌰𑌯த்திலும் 𑌕𑍁𑌹𑍇𑌤𑍁𑌕𑍁𑌭𑌾𑌵த்தாலே வரும் மதிமயக்குகளெல்லாத்துக்கும் மருந்தாயிருக்கிறபடியையும்; 2 '𑌯𑍇 𑌯𑌥𑌾 𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑌥𑍈𑌵 𑌭𑌜𑌾𑌮𑍍𑌯

𑌆𑌶𑍁 - சீக்கிரமாக, 𑌨𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 - நாசமடைகின்றன, 𑌉𑌪𑌪𑌾𑌤𑌕𑌂 - உபபாதகங்கள், 𑌕𑌿𑌂𑌪𑍁𑌨𑌃 - (நசிக்குமென்பதில்) கேட்கவேண்டியதென்ன. 𑌪𑌾𑌪𑌨𑍋𑌦𑌕𑌤𑍍𑌵𑌂 - பாபங்களைப் போக்கடிக்கும் தன்மை. 𑌅𑌕𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 - யாத்ருச்சிகமாக, 𑌸𑌨𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 - பார்ப்பதினால், 𑌸𑌂𑌮𑍋𑌹𑌶𑌾𑌲𑌿𑌨𑌾𑌂 - அஜ்ஞானத்துடன் கூடிய மனதையுடைய, 𑌪𑍁𑌂𑌸𑌾𑌂 - மனிதர்களுக்கு, 𑌕𑍁𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 - ப்ரமரூபமான ப்ரத்யக்ஷம், (இதற்குக் காரணம்) 𑌕𑍁𑌵𑌾𑌸𑌨𑌾 - கெட்டவாஸனை, 𑌕𑍁𑌹𑍇𑌤𑍁𑌃-ப்ரமரூபமான அனுமானம், (இதற்குக் காரணம்) 𑌕𑍁𑌤𑌰𑍍𑌕𑌨𑌿𑌚𑌯𑌃 - ஆபாஸ யுக்திகளின் ஸமூஹம். 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌕𑌤𑍍𑌵𑌂-ஶாஸ்திரங்களில் சொல்லியிருக்கும் அர்த்தங்களை இல்லை என்று சொல்லுதல், (இதற்குக் காரணம்) 𑌕𑍁𑌭𑌾𑌵𑌃 - கெட்ட தாத்பர்யம், அதாவது ஶாஸ்திரங்களுக்கு இல்லாத தாத்பர்யத்தை இருப்பதாக ப்ரமித்தல், இவைகள், 𑌲𑌯𑌂 - நாஶத்தை, 𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍 - அடையும். '𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌤𑍍𑌰𑌯' மாவது ப்ரத்யக்ஷம், அனுமானம், ஶப்தம். '𑌕𑍁𑌹𑍇𑌤𑍁𑌕𑍁𑌭𑌾𑌵த்தால்' இத்யாதிக்கு ப்ரமரூபமான ப்ரத்யக்ஷாதிகளும். இவைகளுக்குக் காரணங்களான குவாஸனா குதர்க்கங்களும், அதாவது ப்ரம ரூபங்களான குவாஸனை முதலிய மூன்று காரணங்களினால் ப்ரமரூபமான குயுக்தி முதலியவைகள் உண்டாகின்றன என்று தாத்பர்யம். மருந்தாயிருக்கிற - மருந்துபோல் போக்கடிப்பதாயிருக்கிற. 𑌯𑍇-எவர்கள், 𑌯𑌥𑌾-எப்படி, 𑌮𑌾𑌂-என்னை, 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇-ஆஶ்ரயித்திருக்கிறார்களோ,

1 பௌஷ்-ஸம். 2 கீதை-4-11

ஹம்' என்றும், 1 'தமருகந்த தெவ்வுருவம்' என்கிற பாட்டிலுஞ் சொல்லுகிறபடியே வாஜ்நஸாவஸிவெஷமான வாஸ்தவாஸத்ஷத்தையும், 2 'கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்கிற வாகஷகஷ்வத்தையு மநுஸந்தித்து, 3 'ஸதீவ ப்ரியஹதாரம் ஜநநீவஸ்தநந்தயம்| ஆசார்யம் ஸிஷ்யவந்மித்ரம் மித்ரவந்நாராயணம் || ஸ்வாமிசேவ ஸுஹ்ருச்சேவ குருச்சேவ

அதாவது ப்ரார்த்திக்கிறார்களோ, தாந்-அவர்களை, ததைவ-அப்படியே, ஹஜாமி - ப்ரீதிபண்ணி வைக்கிறேன். தமருகந்தது - பாகவதர்கள் ப்ரியப்பட்டது, எவ்வுருவம் - எந்த ரூபமோ, அவ்வுருவம்தானே-அவ்வுருவத்தை யுடையவனாகத் தானே ஆகிறான் (அவர்கள் சாற்றின திருநாமமே தனக்குத் திருநாமமாகவும் உடையவன்). வாஜ்நஸாவஸிவெஷமான - வாக்கினாலும் மனதினாலும் அளவிட முடியாத. கண்ட கண்கள் - (அணியரங்கனென்னமுதினை - ஸ்ரீ ரங்கத்தில் அர்ச்சா ரூபியாய் எழுந்தருளி யிருக்கும் போக்ய பூதனான பகவானை) ப்ரத்யக்ஷமாகப் பார்த்த கண்கள், மற்றொன்றினை - வேறொரு வஸ்துவை, அதாவது இந்த அர்ச்சாவதாரம் தவிர மற்றரூபங்களையும் என்றபடி, காணாவே - பார்க்கமாட்டாது. ஆகஷகஷ்வம் - (இந்திரியங்களை) தன்னிடத்திலேயே வஸப்படுத்திக் கொள்ளுதல். ப்ரியஹதாரம் - இஷ்டனான புருஷனை, ஸதீவ - பதிவ்ரதையான ஸ்திரீ போலவும், ஸ்தநந்தயம் - முலைப்பாலுண்ணும் ஸிஸுவை, ஜநநீவ - தாயார் போலவும், ஆசார்யம் - ஆசார்யனை, ஸிஷ்யவத் - ஸிஷ்யன் போலவும், மித்ரம் - ஸ்நேஹிதனை, மித்ரவத் - (மற்றொரு) ஸ்நேஹிதன் போலவும், ஹரிம் - பகவானை, பூஜயேத் - உபசரிக்க வேண்டும். ஸ்வாமிசேவ - ஸ்வாமியாகவும், ஸுஹ்ருச்சேவ-ஸுஹ்ருத்தாகவும், குருச்சேவ - குருவாகவும், பிதாசேவ - பிதாவாகவும், மாதாசேவ - மாதாவாகவும், ஸர்வதா - எப்பொழுதும், மாயவ: - பகவான், ஸாவ்ய: (நம்மால்) அநுஸந்தானம் செய்யத்தக்கவர்.

1 மு-தி-44. 2 அமல-10. 3 பாண்-ஸம்-4-37,38.

ச ராயவ:॥, 1 'யதா யுவராஜாநம் யதா ச மத்தஹஸ்தி நம் । யதா ப்ரியாதிதிம் ப்ராப்தம் பகவந்தம் ததார்ச்சயேத்॥', 2 'யதா ச புத்ரம் தயிதம் ததைவோபசரேத்தரிம்' என்கிறபடியே அவ்வோ ஸம்பந்தப்ருந்தபாரத்வ ஸௌலப்யாதிகளுக்கநுரூபமான வ்ருத்தியைப்பண்ணவும், அப்போது 3 'ததாஹி யத் கார்யமுபைதி கிஞ்சித் உபாயநம் சோபஹ்ருதம் மஹார்ஹம் । ஸ பாது

யுவராஜாநம் யதா-யுவராஜாவை எப்படியோ, மத்தஹஸ்திநம் - மதம் பிடித்த யானையை, யதா-எப்படியோ, ப்ராப்தம் - வந்திருக்கிற, ப்ரியாதிதிம்-இஷ்டமான விருந்தாளியை, யதா-எப்படியோ, ததா - அப்படியே, பகவந்தம் - பகவானை, அர்ச்சயேத் - ஆராதனம் செய்ய வேண்டும். தயிதம் - பிரியனான, புத்ரம் - பிள்ளையை, யதா - எப்படியோ, ததைவ - அப்படியே, ஹரிம் - பகவானை, உபசரேத் - உபசாரம் செய்ய வேண்டும். ஸம்பந்தப்ருந்த - ஸ்வாமித்வம் முதலிய ஸம்பந்தங்களின் கூட்டம். இவைகளில் ஒவ்வொரு ஸம்பந்தமே உபசாரம் செய்வதற்குக் காரணமாயிருக்க எல்லாம் சேர்ந்திருக்கும்பொழுது கேட்க வேண்டியதில்லை என்று 'ப்ருந்த' ஶப்தத்திற்குத் தாத்பர்யம். 'பாரத்வ' இத்யாதிக்கு பரத்வத்திற்குஅனுகுணமானது பக்தியுடன் செய்வது,இது யுவராஜாதி த்ருஷ்டாந்தத்தினலேற்பட்டவர்த்தம். ஸௌலப்யத்திற்கு அனுகுணமானவை கையிற்கிடைத்தது கொண்டு யதா ஶக்த்யாராதனம் செய்வது, இது புத்ரமித்ராதி த்ருஷ்டாந்தத்தால் ஏற்பட்டவர்த்தம். அர்ச்சாவதாராதிகள் ராஜா முதலியவர்களைப்போலே அனுமதி முதலியவைகளைச் செய்யாமலிருந்தபோதிலும் உபலாளநம் செய்யும் ப்ரகாரத்தை ஸத்ருஷ்டாந்தமாக நிரூபித்தருளுகிறார்—'அப்போது' என்றாரம்பித்து. அப்போது-ஶாஸ்திரங்களில் ஏற்பட்டிருக்கும் ப்ரகாரமாகக் கைங்கர்யங்களைச் செய்யும்பொழுது. ததாஹி-ஸ்ரீபாதுகைகள் ராஜ்யபரிபாலனம் செய்யும்பொழுது, கிஞ்சித்கார்யம் - ராஜ்யதந்த்ரத்தைப்பற்றிய எந்தக்கார்யமானது, உபைதி - வருகிறதோ, மஹார்ஹம் - உயர்ந்ததான,

1 ஶாண்-ஸ்ம்-4-31.	2	3 ராமா-அயோ-115-27.

ஸம்பந்தமே யென்று விஶ்வஸித்து, அபி ஷேகம் பண்ணப்புகுகிற ராஜகுமாரனுக்கு ராத்ரியில் விளக்கேற்றி வைக்குமாப்போலே தனக்கவர்கள் பண்ணின வெளிச்சிறப்பையும் அதடியாகத் தனக்குவந்த கைங்கர்யாதிகளையு மநுஸந்தித்து அவர்கள் பக்கலிலே க்ருதஜ்ஞனுயிருக்கவும், இவை யெல்லாத்துக்கும் ஸாதாரணமான ஹேதுகாரணமுமாய் ஶேஷத்வ ஸாம்யமில்லாத ஆத்மாநுபவமான ஸஹவாஸத்தைப்பற்ற வயம்நியோஜ்ய ஸ்வாதந்த்ர்யமடியாக ஸ்ருஷ்டமாம் விஶேஷத்துக்கும் வரிஹாரமாயிருப்பது

இவ்விடத்தில் 'ஸம்பந்தமே' என்கிற பதத்தில் ஏகாரத்தினால் ஸித்தம். இப்படி ஆசார்ய நிஷ்டையாக ப்ரபத்தி செய்தவனுக்கு அந்த ஆசார்யனிடத்தில் விஸ்வாஸமிருக்கவேண்டுமென்றருளிச் செய்து மற்ற இரண்டுவித நிஷ்டையை யனுஷ்டித்தவர்களும் ஆசார்யன் விஷயத்தில் நடக்க வேண்டும் ப்ரகாரத்தை நிரூபித்தருளுகிறார்—'அபிஷேகம்' என்றாரம்பித்து. பண்ணப்புகுகிற - அடுத்த தினத்தில் நடக்கப்போகிற, கைங்கர்யங்கள்- அவர்கள் உபதேஶித்த பகவானைப் பற்றிய ஜ்ஞானத்தினால் உண்டான ப்ரீதி பூர்வகமான கைங்கர்ய புருஷார்த்தங்கள். பன்மையாயருளிச்செய்திருப்பது ப்ரபத்திக்கு உத்தரக்ஷணம் முதல் மோக்ஷத்தில் நடக்கும் வரையிலான கைங்கர்யங்களெல்லாவற்றையும் குறிக்கிறது. இந்த த்ருஷ்டாந்தத்தினால் பலத்தில் ஸம்ஶயமில்லாமையும், நிர்ப்பரனாயிருக்கையும், ஸந்தோஷம் உண்டானமையும் தெரிவிக்கப்பட்டது. அதடியாக - இந்த ப்ரீதி, நிஸ்ஸம்ஶயம், முதலியவைகளைக் காரணமாகக் கொண்டு. இது மூன்றுவித நிஷ்டர்களுக்கும் ஆசார்யர்களினால் ஏற்படும் உபகாரம். இவை யெல்லாத்துக்கும் - யாத்ருச்சிக ஸுக்ருதம் முதலாக ப்ரபத்தி யனுஷ்டானஉத்தர கைங்கர்யம்வரையிலுண்டான பரிபாகங்களுக்கும், ஆத்மாநுபவமான - ஆத்ம ஸ்வரூபத்தைச் சேர்ந்ததான. 'தமேவ ஸ்வதந்த்ரம் ஸந்தம் ... வாநராத்மகஸம்ஸாரம் கேசித் த்யாஹ' இத்பாதிகளில் ஸ்ரீ பாஷ்யகாரருளிச்செய்தபடியே பகவானுடைய ஸ்வாதந்த்ர்யத்தினால் மோக்ஷ தஶையில் உண்டாகிய அனுபவ கைங்கர்யங்களுக்கு விச்சே

1 'இருளகற்றுமெரிகதிரோன் மண்டலத்தூடேற்றி வைத்தேணிவாங்கி' என்றும், 2 'போயினல் பின்னை யித்திசைக் கென்றும் பிணை கொடுக்கிலும் போக வொட்டார்' என்றும், 3 'வண்புகழ் நாரணன் திண்கழல்' என்றும், 4 'சன்மசன்மாந்தரங்காத்தடியார்களைக்கொண்டு போய்த்தன்மை பெறுத்தித் தன்

தம் வருமோ என்கிற ஶங்கைக்கு பரிஹாரமாக ஸூத்திரக்காரர் அருளிச் செய்தபடியே ஶப்தமே ப்ரமாணம் என்று கொண்டு த்ரமிடோப நிஷத்துக்களை உதாஹரித்தருளுகிறார்— 'இருளகற்றும்' என்றாரம்பித்து. இருள் - இருட்டை, அகற்றும்- போக்கடிக்கிற, எரிகதிரோன் - தாபத்தைக் கொடுக்கும் கிரணங்களையுடைய ஸூர்யனுடைய, மண்டலத்தூடு - மண்டலத்தின் நடுவிலே, ஏற்றிவைத்து - மேல் ஏறும்படி செய்து, ஏணி வாங்கி - ஏணியை எடுத்துவிட்டு, அதாவது இறங்கி வருவதற்குக் காரணமில்லாமல் செய்து என்று தாத்பர்யம், 'ஏணி' என்றது புனரா வ்ருத்திக்குக் காரணமான தன்னுடைய ஸங்கல்பத்தை. போயினல் - (பரமபதத்திற்கு) போனல், பின்னை - பிறகு, இத்திசைக்கு - இந்தத் திக்குக்கு, அதாவது இந்த ஸம்ஸாரத்துக்கு, என்றும் - ஒரு காலத்திலும், எப்பொழுதும் என்றபடி, பிணைகொடுக்கிலும் - (தான் திரும்பி வருவது நிஶ்சயமென்று அவன் திருவுள்ளத்தில் படுவதற்காக பெரிய பிராட்டியார் முதலானவர்களை) ஜாமீனைக் கொடுத்தாலும், போகவொட்டார் - போவதற்கு ஸம்மதிக்கமாட்டார். ஒட்டுகை- ஸம்மதிக்கை. வண் - விலக்ஷணமான, புகழ் - கல்யாண குணங்களையுடைய, நாரணன் - பகவானுடைய, திண் - த்ருடமான (ஆஶ்ரிதர்களை பொருநாளும் கைவிடாததான), கழல் - திருவடிகளை, சேர்-ஆஶ்ரயி. தன் அடியார்களை - தன்னை ஆஶ்ரயித்தவர்களை, சன்ம சன்மாந்தரம் காத்து - ஜன்ம ஜன்மாந்திரங்களிலிருந்து, அதாவது அவைகள் வராதபடி, ரக்ஷித்து, கொண்டுபோய்- பரமபதத்துக்கு அழைத்துக் கொண்டுபோய், தன்மைபெறுத்தி - தன்னுடைய ஸ்வபாவத்தை அவர்கள் பெறும்படி செய்து, 'தன்மை' என்பது பகவானுடைய ஆநந்தம் முதலிய ஸ்வபா

1 பெரி-தி-4-9-3.  2 பெரி-தி-4-5-2.
3 திரு-1-2-10.  4 திரு-3-7-7.

தாளிணைக் கீழ்க்கொள்ளுமப்பன்' என்றும், 1 'தன்
தாளிணைக் கீழ்ச்சேர்த்தவன் செய்யுஞ்சேமம்' என்
றுஞ் சொல்லுகிறபடியே அநாவ்ருத்தியிலும்
முன்பு ஸம்ஸரிப்பிக்கையிற்போலே ஸத்யஸங்கல்பனும்
சேஷியான ஸ்ரிய:பதியினுடைய 2 'பண்டை நாளா
லே நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்
கொண்டு நின்கோயில் சீய்த்து' என்று சொல்லப்

---

வங்களாகவுமாம், அப்பொழுது பரம ஸாம்யத்தைக் கொடு
த்துஎன்று தாத்பர்யம். அன்றிக்கே ஜீவாத்மாவுக்கு அஸாதா
ரணமான ஸ்வபாவத்தை என்றாகவுமாம். அப்பொழுது 'தன்
னுடைய ஸ்வபாவத்தை அடைகிறான்' என்றர்த்தமுள்ள ஸ்ருதி
வாக்யம் விவக்ஷிதம், தன் தாளிணைக்கீழ் - தன்னுடைய திருவ
டிகளிரண்டின்கீழே, கொள்ளும் - அங்கீகரிக்குமவனான, அப்
பன் - நிருபாதிகனான பிதா. தன் தாளிணைக்கீழ், சேர்த்து-சேரும்
படி செய்து, அவன்-அந்தப் பகவான், செய்கிற, சேமத்தை-க்ஷே
மத்தை, 'க்ஷேம'மாவது அடைந்திருப்பதை எப்பொழுதும் பரி
பாலிக்கை, அதாவது புநராவ்ருத்தி இல்லாதபடி செய்கை,
'யோகக்ஷேமம் வஹாம்யஹம்' என்கிற இடத்தில் 'க்ஷேம' ஶப்தம்
இப்படி வ்யாக்யாதமாயிருக்கிறது. சொல்லுகிறபடியாலே - ப்ர
மாணங்களில் இப்படி ஏற்படுகிற படியாலே, முன்பு - உபா
யானுஷ்டானத்திற்கு முன்னால்; 'ஸம்ஸரிக்கையிற்போலே'
இத்யாதிக்கு ஸம்ஸரிக்கும் பொழுது அவனுடைய ஸங்கல்
பம் ஒருவராலும் நிவ்ருத்தி செய்ய முடியாததா யிருந்
ததைப்போலவே அபுநராவ்ருத்தி ஸங்கல்பமும் ஒருவராலும்
நிவ்ருத்தி செய்ய முடியாதென்று தாத்பர்யம். இதில் அவன்
கருணையே முக்கிய காரணமென்று நிரூபித்தருளுகிறார்—'பண்
டைநாளாலே' என்றாரம்பித்து. பண்டைநாளாலே - முன்
காலத்திலே (உண்டாகியதான). மேலும் கீழ் வ்யாக்யாதம்
'ஸஹஜகாருண்ய' மென்பதினால் உபாயானுஷ்டானத்
தினால் உண்டான க்ருபை நிக்ரஹ ஸங்கல்ப நிவ்ருத்தி
க்கு மாத்திரம் காரணம், மோக்ஷத்தைக் கொடுப்பதற்குக் கா

---

1 திரு-7-5-10. 2 திரு-9-2-1.

பட்ட ஸஹஜகாருண்யமென்று தெளிந்தவ்விஷயத்திலும் க்ருதஜ்ஞனாயிருக்கவும் ப்ராப்தம்.

இவ்வுத்தரக்ருத்யத்தில் மநோவாக்காயங்களென்று சொல்லுகிற கரணங்கள் மூன்றிலும் வர்ஜநீயங்களிலும் பரிக்ராஹ்யங்களிலும் ஸாரமிருக்கும்படி சொல்லுகிறோம். 1 'விஷஸ்ய விஷயாணாஞ்ச தூர

கரணத்ரயங்களாலும் செய்யவேண்டிய ஸாராம்ஸம்.

---

ணம் அவனுடைய ஸஹஜகாருண்யமே என்பது த்யோதிதம். 'அவ்விஷயத்திலும்' என்று பொதுவாய் அருளிச் செய்திருப்பது கைங்கர்யத்திற்குக் காரணமான கருணையைச் செய்கிறவர்களாகக் கீழ்ப் பாஸுரத்தில் உதாஹரிக்கப்பட்ட பகவானிடத்திலும், லக்ஷ்மியினிடத்திலும் என்பதைத் தெரிவிப்பதற்காக. இப்படிப் பொதுவாக உத்தர க்ருத்யங்களை யருளிச்செய்து அவைகளை விசேஷித்து நிரூபிக்கில் க்ரந்தம்விஸ்தரிக்குமென்றுகொண்டு அதின் ஸாராம்ஸத்தை யருளிச் செய்கிறார்— 'இவ்வுத்தரக்ருத்யத்தில்' என்றாரம்பித்து. கீழ்ச் சொல்லியபடி நடக்கும் உத்தர க்ருத்யத்தில் என்றபடி. 'மநோவாக்காயங்கள்' என்பதற்கு 'ஸரீரவாங்மநோபிர்யத் கர்ம ப்ராரபதே நர: । ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ: ॥' என்றருளிச் செய்யப்பட்டிருப்பதினால் இவைகளே ப்ரதானங்களாகவும், மற்றவைகள் உபலக்ஷணங்களாகவு மாகின்றன என்று தாத்பர்யம். வர்ஜநீயங்களிலும் - விடத்தக்கவைகளிலும்; இதை முதலி லருளிச்செய்திருப்பது அனுஷ்டானத்தைக் காட்டிலும் அபராதமில்லாமலிருப்பது மேல் என்பதைத் தெரிவிப்பதற்காக. பரிக்ராஹ்யங்களிலும் - அங்கீகரிக்கத்தக்கவைகளிலும். ஸாராம்ஸத்தைச் சொல்லுகிறோம் என்றருளிச்செய்யாமல் 'ஸாரமிருக்கும்படி' என்றருளிச் செய்திருப்பதினால் ஸ்வபுத்திபாலே ஒன்றைக்கல்பித்து ஸாரமென்று சொல்லவில்லை, ப்ரமாணங்களில் ஸாரமென்றேற்பட்டிருப்பதே நிரூபிக்கப்படுகிறது என்பது த்யோதிதம். விஷஸ்ய - விஷத்திற்கும், விஷயாணாஞ்ச - ஸப்தாதி விஷயங்களுக்கும்,

ஊத்ருஷ்டு ஊஷூ । உவஹுக்தம் விஷம் ஹந்தி விஷயாஸ்ம ரணாதபி॥' என்றும், 1 'ஆவி திகைக்க வைவர் குமைக்குஞ் சிற்றின்பம் பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ' என்றுஞ் சொல்லுகையாலே வைராக்யத்தைக் குலையாமைக்காக மறக்க வேண்டுமவற்றில் ப்ரதானம் விஷயாஸ்வாதம். க்ருதக்நதை வாராமைக்காக நினைக்க வேண்டுமவற்றில் ப்ரதானம் ஈச்வரன்செய்த ப்ரதமகடாக்ஷம் முதலான வுபகாரம். காருண்யங் குலையாமைக்காகச்

ஊத்ருஷ்டு - மிகவும் தூரமான, ஊஷூ - வ்யத்யாஸம் (இருக்கிறது), (எப்படி யென்னில்) விஷம், உவஹுக்தம்- ஸாப்பிடப்பட்டதாய்க் கொண்டு, ஹந்தி - கொல்லுகிறது, விஷயா: - விஷயங்கள், ஸ்மரணாதபி - நினைப்பது மாத்திரத்தினாலும் (கொல்லுகின்றன). ஆவி - மனது, திகைக்க - ப்ரமிக்கும்படி, ஐவர் - ஐந்து இந்திரியங்கள், குமைக்கும் - ஹிம்ஸிக்கும்படியான, தந்தாம் விஷயங்களைக் கொடுக்கும்படி நிர்ப்பந்திக்கிற, பல சிற்றின்பம் - அனேகவிதங்களான இன்பங்களை, காட்டி - காண்பித்து அனுபவிக்கும்படி செய்து, பாவியேனை, படுப்பாயோ - ஹிம்ஸிப்பாயோ. குலையாமைக்காக- குறைந்து போகாமலிருப்பதற்காக. விஷயா ஸ்வாதம் - விஷயங்களில் ஆசை, அல்லது அனுபவமாகவுமாம். இத்தால் மனதால் பரிஹரிக்கவேண்டிய தருளிச் செய்யப்பட்டதாகிறது. 'தோஷாநுஸந்தாநாத் ஸுக்ரவிரக்திர் வைராக்யம்' என்கிறபடியே அவைகளில் தோஷத்தை விசாரிப்பதற்காக அடிக்கடி நினைப்பதும் வைராக்யத்தைக் குலைத்துவிடும் என்று ஸ்ரீஸங்கல்ப ஸூர்யோதயத்தில் அருளிச் செய்திருப்பது இங்கனுஸந்தேயம். 'க்ருதக்நதை வாராமைக்காக' என்பதற்கு 'ப்ராயச்சித்தம் க்ருதக்நஸ்ய நாஸ்தி' என்று எல்லாப் பாபிகளையும் விட மேற்பட்டவனாகச் சொல்லப்படுகிற க்ருதக்நன் என்கிற தோஷம் வாராமலிருப்ப

1 திரு-6-9-9.

சொல்லா தொழிய வேண்டுமவற்றில் **ஆத்யம் ஸ்வோத்கர்ஷம்.** உபாயநிஷ்டையை மறவாமைக்காக 1 '**ஸதைவம் வக்தா**' என்கிறபடியே சொல்லவேண்டுமவற்றில் **ஆத்யம் த்வயம்.** உகந்து பணிகொள்ள வுரியனான வெம்பெருமான் திருவுள்ளமழலாமைக்காக **காரணத்ரயத்தாலும்** 2 'செய்யாதனசெய்யோம்'

---

தற்காக என்று தாத்பர்யம். **முதலான**-ஜ்ஞாநோபதேஶம் முதலியவைகள், அப்படி நினைக்காவிடில் க்ருதக்னனாவான் என்று தாத்பர்யம். **ஸ்வோத்கர்ஷம்** - தன்னுடைய மேன்மை, அப்படித் தன்னை மேற்பட்டவனாகச்சொல்லிக் கொண்டால் பகவானுடைய க்ருபைக்குக் காரணமாகிய தீநநாக இருக்கையாகிற கார்பண்யம் போய்விடும் என்று தாத்பர்யம். இந்தக் கார்பண்யாநுஸந்தானமில்லாவிடில் உபாயாந்தராந்வயமும் ஏற்படுமென்று கீழ் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. **ஏவம்** - கீழ் வ்யாக்யானம் செய்தபடியே அர்த்தாநுஸந்தானத்துடன், **ஸதா** - எப்பொழுதும், **வக்தா** - சொல்லிக்கொண்டிருப்பவனாய். உபாயநிஷ்டை குறைந்துவிட்டால் கீழதிகாரத்தில் '**ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநம் ஸாஹஸிகவைஷயிகாதிப்ரபவநதாஸ**' என்றருளிச் செய்யப்பட்ட ஆநந்தம் குறைந்துவிடும், உபாயாந்தரஸ்பர்ஶமும் உண்டாகும் என்று தாத்பர்யம். **பணிகொள்ள உரியனான** - (நம்முடைய) கைங்கர்யத்தை அங்கீகரிக்கத்தகுந்தவனான. **அழலாமைக்காக** - அழன்றுபோகாமைக்காக, அழலுகை - கோபித்துக் கொள்ளுதல், அதாவது பகவானுடைய திருவுள்ளங் கலங்காமைக்காக.

இவ்விடத்தில் கீழே உத்தேஶித்தபடி ஶரீரத்தினாலே விடவேண்டியவைகளிலும் செய்யவேண்டியவைகளிலும் ஸாராம்ஶத்தை யருளிச் செய்யவேண்டி யிருக்க '**காரணத்ரயத்தாலும்**' என்றருளிச் செய்திருப்பது பாகவத கைங்கர்யம் முதலியவைகள் மனதில் எண்ணாமல் ஶரீரத்தினால் மாத்திரம் செய்யமுடியாதாகையினாலும், வாயினால் அபசாராதிகளைச் செய்துகொண்டிருந்தால் ஶரீரத்தால் செய்வது நிஷ்ப்ர

---

1 ஶர-கத். 2 திருப்-2.

என்னுமவற்றில் ப்ரயோஜநம் ப்ரஹ்மவிதபசாரம். பாகவதாபசாரம் வற்றுதல் வரையிடுதல் செய்யாமைக்காக கரணத்ரயத்தாலும் கர்தவ்யங்களில் ப்ரயோஜநம் ஸர்வகைங்கர்யத்திலெல்லை நிலமாய் சாஸ்த்ராநுஜ்ஞாதமான ஆசார்யாதி பாகவதகைங்கர்யமும். ஸ்வயம்ப்ரயோஜநமான விவ்வுத்தரக்ருத்யமும் ரஹஸ்யத்ரயத்தில் ஸது ப்ரதிபாதகங்களான ப்ரதேசங்களிலே யதாவஸேயம்.

---

யோஜனமாகையினுலும், கரணத்ரயமும் சேர்ந்திருக்கவேண்டும் என்கிற தாத்பர்யத்தினுல். செய்யாதன - பெரியோர்களினுல் அனுஷ்டிக்கப்படாத கார்யத்தை, அன்றிக்கே செய்யத்தகாத கார்யத்தை, அதாவது பாகவதாபசாரத்தை என்றபடி, செய்யோம் -செய்யமாட்டோம். 'ப்ரஹ்மவித்துக்க'ளாவது ஸதாசார்ய ஸமாஸ்ரயணத்தினுல் தத்வஜ்ஞான முடையவர்களாய் முமுக்ஷுக்களானவர்கள். இத்தால் ப்ருஹ்மவிதபசாரம் பகவானுடைய நிக்ரஹத்துக்குக் காரணமாகையினுல் இது ஸகலவிதமான அநர்த்தங்களுக்கும் காரணமாகும் என்பது த்யோதிதம். வற்றுதல்- மிகுதியில்லாமல் நசித்து விடுதல், வரையிடுதல் - அளவிடப் பட்டதாகுதல், அதாவது குறைந்துவிடுதல். த்ரிகரணங்களாலும் பாகவத கைங்கர்யம் செய்யாவிடில் புருஷார்த்தம் நாசமடையும், ஏதாவது ஒரு கரணத்தினுல் மாத்திரம் செய்தால் அது குறைந்துவிடும் என்றபடி. எல்லைநிலம் - ஓரத்தில் (கடைசியில்) இருக்கும் நிலம். சாஸ்த்ராநுஜ்ஞாதமான - (வர்ணாஸ்ரமதர்மங்களுக்கு அனுரூபமாக) சாஸ்திரங்களில் அனுமதி பண்ணப் பட்ட, இப்படிக்கில்லாவிடில் இது கைங்கர்யமாகாது. இந்த பாகவத கைங்கர்யத்திலும் ப்ரதானம் ஆசார்ய கைங்கர்யம் என்பதைத் தெரிவிப்பதற்காக 'ஆசார்யாதி' என்றருளிச் செய்யப்பட்டிருக்கிறது. 'இவை இரண்டிலும் ப்ரயோஜநம் ஆசார்ய கைங்கர்யம்' என்கிற ஸ்ரீ ரஹஸ்யரத்னாவளி ஸ்ரீ ஸூக்தி இங்கு அனுஸந்தேயம். 'ஸ்வயம் ப்ரயோஜநமான' என்றது ஹேது கர்ப்ப விசேஷணம்.

விண்ணவர் வேண்டி விலக்கின்றி
மேவு மடிமையெல்லாம்
மண்ணுலகத்தில் மகிழ்ந்
தடைகின்றனர் வண்டுவரைக்
கண்ண னடைக்கலங்கொள்ளக்
கடன்கள் கழற்றிய நம்
பண்ணமருந் தமிழ்வேத
மறிந்தபகவர்களே. 22

---

இப்படிக் கீழருளிச் செய்த உத்தரக்ருத்யத்தைச் சில ப்ர பன்னர்கள் ப்ரத்யவாய பரிஹாராதிகளுக்காக அனுஷ்டித்த போதிலும் பகவானிடத்தில் நிரதிஶயமான ப்ரீதி விஶேஷத்தை உண்டாக்குகிற த்ரவிடவேதாந்த தாத்பர்யத்தை ஸதாசார்யானுக்ரஹத்தினால் யதாவத்தாக அறிந்த ப்ரபன்னோத்தமர்கள் முக்தர்களுடைய கைங்கர்யத்தைப்போலவே ப்ரீதி பூர்வகமாய் ஸ்வயம் ப்ரயோஜனமாக அனுஷ்டிக்கிறார்கள் என்றருளிச்செய்கிறார்—'விண்ணவர்' என்றாரம்பித்து.

ப - ரை] **வண்** - விலக்ஷணமான, **துவரை** - த்வாரகாபட்டணத்தில் வஸிக்கிற, **கண்ணன்** - ஸ்ரீ க்ருஷ்ணன், **அடைக்கலங் கொள்ள** - நம்முடைய பரத்தை அங்கீகரித்துக்கொள்ளுவதினாலே, **கடன்கள்** - மூன்றுவிதமான கடன்களையும், **கழற்றிய** - நிவ்ருத்தி செய்தவரான, **நம** - நம்முடைய, **பண்** - கானம், **அமரும்** - அமர்ந்திருக்கிற, **தமிழ்வேதம்** - த்ரவிடவேதத்தை, அதாவது ஆழ்வார்களின் ஸ்ரீ ஸூக்திகளை, **அறிந்த** - ஸார்த்தமாக ஸதாசார்யர்களிடமிருந்து அறிந்தவர்களான, **பகவர்களே** - பகவானென்கிற ஶப்தத்திற்கு அர்த்தமானவர்களே, ஏகாரம் மற்றவர்களை விலக்குகிறது, **விண்ணவர்** - நித்யஸூரிகள், **வேண்டி** - ப்ரார்த்தித்து, **விலக்கின்றி** - ஒருவிதத் தடங்கலுமில்லாமல், **மேவும்** - ப்ரீதியுடன் செய்கிற, **அடிமையெல்லாம்** - கைங்கர்யங்களெல்லாவற்றையும், **மண்ணுலகத்தில்** - இந்தப் பூலோகத்தில், **மகிழ்ந்து** - ஸந்தோஷத்தை யுடையவர்களாய், **அடைகின்றனர்** - அடைகிறார்கள்.

'**வேண்டி**', '**அடைகின்றனர்**' என்பதினால் நித்யஸூரிகள் ப்ரார்த்தித்தடையும் கைங்கர்யங்களை இவர்கள் அப

படியே ப்ரஸாதநமான ஶரணாகதியைப் பண்ண,
1 'ததோ(அ)த வரதோ தேவோ ஜிதக்ரோதோ ஜிதே
ந்த்ரிய:। ப்ரீதிமாநபவத்தத்ர ருத்ரேண ஸஹஸங்கத:॥'
என்கிறபடியே ஸர்வேஶ்வரன் ப்ரஸந்நனாய் ருத்ர
னை யங்கீகரித்தானென்கையாலே ஸித்தம். தான் குற்ற
வாளனாகவுமாம், தானிப்போது குற்றஞ்செய்யாதே
யிருக்க ஜந்மாந்தர து:க்ருதத்தாலே யாகவுமாம், சில
பாகவதர் தன்னை வெறுக்கில் ஏதேனுமொரு விர
காலே யவர்களை க்ஷமை கொள்ளுகிற த்வாரத்தாலே
ஶார்ங்கிணை க்ஷமை கொள்ளவேணு மென்னுமிடம்
2 'ரூக்ஷாக்ஷராணி ஶ்ருண்வந்த்வை ததா பாகவதேரி

ப்ரஸாதயாமாஸ-அனுக்ரஹம் செய்யும்படி ப்ரார்த்தித்தார், ஸ்ரஷ்டாரம் - லோகங்களுக்குக் காரணமாயும், வரேண்யம் - தேவதைகளுக்கெல்லாம் ஶ்ரேஷ்டனையும், வரதம் - வரங்களைக் கொடுப்பவராயுமிருக்கிற, ஹரிம் - விஷ்ணுவை, ஶரணம்ச - ஶரணமாகவும், ஜகாம - அடைந்தார், அத - பிறகு, தத: - அந்த ஶரணாகதியினால், வரத:-வரத்தைக் கொடுக்கிறவராயும், ஜிதக்ரோத: - போக்கப்பட்ட கோபத்தை யுடையவராயும், ஜிதேந்த்ரிய: - இந்திரியங்களை ஜயித்தவராயுமிருக்கிற, தேவ:- பகவான், தத்ர - அவ்விடத்தில், ப்ரீதிமாந் - ப்ரீதியையுடையவராக, அபவத் - ஆனார். ருத்ரேணஸஹ - ருத்ரனோடு கூட, ஸங்கத: - சேர்ந்தார். ஸித்தம் - இப்படியே மற்ற ப்ரபன்னர்கள் விஷயங்களிலும் செய்வான் என்பது ந்யாயத்தினாலேற்படுகிறது. இளைய பெருமாள் ஒரு குற்றமும் செய்யாமலிருக்க மஹாராஜரிடத்தில் அபராதக்ஷாமணம் செய்து கொண்டது அஸங்கதமன்றோ வென்னவருளிச் செய்கிறார்— 'தான்' என்றாரம்பித்து. இப்போது-இந்த ஜன்மத்தில் இந்தப் பாகவதன் விஷயத்தில். ஏதாவது ஒரு பாபமில்லாவிடில் பாகவதர்கள் வெறுக்கமாட்டார்களாகையினால் 'ஜந்மாந்தர' இத்யாதி அருளிச் செய்யப்பட்டிருக்கிறது. த்வாரத்தாலே — த்வாரமாகக்கொண்டு. ததா-அப்படியே, பாகவதேரிதாந்-பாகவ

1 பா-ஶா-352-95. 2 லைங்கம்.

வத் | ஸ பாபக்ரூர: ப்³ரஹ்மவஹ்நிதக்³த⁴: வத்⁴யோ த³ண்ட்³யோ ந வாஸநீய: ||' என்கிறபடியே பகவத³பி⁴மாந பா³ஹ்யனுமாய், வைஷ்ணவ ப்ரக்ருதியாயிருக்கிற தனக்கு ஸம்ப⁴வமென்னலாம்படி ஸுது³ர்லப⁴மான பாகவத ஶேஷத்வத்தையும், ஸ்வபா⁴வமாய் நிற்கிற ஶமத³மாதி³களையுமிழந்தானாம். இவற்றை யிழக்கைதானே யிவனுக்கு வத⁴மும் த³ண்ட³மும். பகவத³பி⁴மாந பா³ஹ்யதையின் கொடுமையை 1 'அளிய நம்பையலென்னாரம்மவோ கொடியவாறே' என்று பாகவத ஶேஷத்வமே தமக்கு நிரூபகமாக ஸ்வீகரித்த தொண்டரடிப்

---

வத்-என்னைப்போல, அதாவது நான் ப்ருகு முதலியவர்களை எப்படி அபசாரக்ஷமாபணம் பண்ணிக் கொண்டேனோ அதைப் போலே, **ந ப்ரணமேத்** - ஸேவிக்கமாட்டானோ, **ஸ:** - அந்த, **பாபக்ரூர:**-பாபீ, **ப்³ரஹ்மவஹ்நிதக்³த⁴:** - ப்ராம்மணனுடைய கோபமாகிற காட்டுத்தீயினால் கொளுத்தப்பட்டவனாய், **வத்⁴ய:**- கொல்லத்தகுந்தவன், **த³ண்ட்³ய:** - சிக்ஷிக்கத்தகுந்தவன், **ந வாஸநீய:** - என்னைச் சேர்ந்தவனுமல்ல. **பா³ஹ்யனுமாய்** - விஷயமாகாதவனாய், **வைஷ்ணவ ப்ரக்ருதியாய்** - வைஷ்ணவர்களுக்கு அஸாதாரணமான லக்ஷணங்களை யுடையவனாய். '**வத⁴**'மாவது ஸ்வரூப நாசம், '**த³ண்ட³**'மாவது பொருள்களுக்கு நஷ்டம். பாகவத தாஸத்வமாகிற ஸ்வரூப நாசம் '**வத⁴ம்**' என்றும், இவனுக்கு அஸாதாரணமான ஶமதமாதிகளை இழக்கை, '**த³ண்ட³ம்**' என்றும் சொல்லப்படுகிறது. அளிய - க்ருபை பண்ணக் கூடிய, நம் - நம்முடைய, பையல் - சிறுவன், என்னார் - என்று நம்மை அபிமானிக்கிறாரில்லை; 'அம்மவோ' என்பது துக்கத்தின் மிகுதியைக் காட்டுகிறது; கோடியவாறே - (நம்முடைய கர்மங்களுடைய) க்ரூரமான ஸ்வபாவம். **நிரூபகமாக**-ஸ்வரூபத்தை நிரூபிக்கக் கூடியதாக, **ஸ்வீகரித்த**-போக்யமாகத் தோற்றின. திருநாமமே இவ்வர்த்தத்தைக் காண்பிக்கிறதுஎன்று தெரிவிப்பதற்காக 'தொண்டரடிப்பொடி' என்று நிர்தேசித்திருக்கிறது.

---

1 திருமாலை-37.

பொடியாழ்வா ரருளிச்செய்தார். இச்ச்லோகங்களில் ப்ராஹ்மணஶப்தம் 1 'விஷ்ணும் க்ராந்தம் வாஸுதேவம் விஜாநந் விப்ரோ விப்ரத்வம் கச்சதே தத்வதர்சீ' என்கிற உக்தியாலே விஶேஷ விஷயம். ஸாமாந்ய விஷயமானாலும் பாகவத விஷயத்திலவஶ்யம் கைமுதிகந்யாயத்தாலே ஸித்தம்.

**அநுதாபோ நிவ்ருத்திஶ்ச ப்ராயஶ்சித்தாரம்பகஸ்ததா: ।**
**தத்ஸமாப்த்யவஸாயஶ்ச ஸேவ்ய நிஷ்க்ருதிவாதிந: ॥**

---

**க்ராந்தம்** - எல்லா லோகங்களையும் அளந்தவனையும், **விஷ்ணும்** - எல்லா இடத்திலும் வ்யாபித்திருப்பவனையு மிருக்கிற, **வாஸுதேவம்** - பகவானை, **விஜாநந்** - அறிந்தவனையும், **தத்வதர்சீ**- தத்வங்களை அறிந்தவனையுமிருக்கிற, **விப்ர:**-ப்ராம்மணன், **விப்ரத்வம்**-ப்ராம்மணன் என்று சொல்லப்படும் தன்மையை, **கச்சதே**- அடைகிறான். **விஶேஷ விஷயம்** - தத்வதர்ஶியான ப்ராம்மணனைக் குறிக்கிறது. **ஸாமாந்ய விஷயமானாலும்** - பொதுவிலே எல்லா ப்ராம்மணர்களைப் பற்றியதா யிருந்தாலும். ஸாதாரண ப்ராம்மணர்களிடத்திலேயே அபசாரப்படக் கூடாதென்பது 'வேதாவிப்ரா: கேஶவஶ்ரேஷ்டா ஸ்ருதா:' இத்யாதி வசனங்களிருக்கிறபடியினால் பகவானுக்கு அந்தரங்கர்களென்கிற காரணத்தினால். அப்படியிருக்க பகவானுக்கு மிகவும் ப்ரியமான பாகவதர்கள் விஷயத்தில் சொல்ல வேண்டியதில்லை என்றபடி. கேவலம் அநுதாபம் மாத்திரம் பாபத்தை நாஶம் செய்துவிடுமென்று 'க்ஷாந்த்யஸ்யைஷா தபஸ்விநாம் க்ராஸ', 'நிகிர ந்ஸயிநீ யதி ஸ்யாதக: ஸர்வ ஹிதயதே' இத்யாதி வசனங்களில் சொல்லியிருக்கப் புன: ப்ரபத்தியே செய்யவேண்டுமென்கிற நிர்ப்பந்தமில்லையே என்ன அருளிச்செய்கிறார்— '**அநுதாபாத்**' என்றாரம்பித்து.

ப - ரை] **அநுதாபாத்** - அநுதாபப்படுவதினாலும், **உபரமாத்** - அபராதங்களினின்றும் நிவ்ருத்தி யடைவதினாலும், **ப்ராயஶ்சித்தாரம்பகத:** - ப்ராயஶ்சித்தம் செய்ய ஆரம்பிப்

---

1 பார-ஆநு-16-2.

பூர்வஸ்மிந் வா பரஸ்மிந் வா கல்பே நிர்விண்ணசேதஸாம் |
நிவர்த்யார்த்தவ்யத்யாஸேऽபி ப்ரபத்திர் ந விஶிஷ்யதே ||
ஏவமேவ லகூநாம் வா குரூணாமபி வாऽகஸாம் |
ஸக்ருத் ப்ரபத்திரேவைகா ஸத்ய: ப்ராயஶ்சித்தகாரணம் ||

உளதான வல்வினைக்குள்ளம் வெருவியுலகளந்த
வளர்தாமரையிணை வன்சரணாக வரித்தவர்தாம்
களைதானெனவெழுங் கன்மந் துறப்பர் துறந்திடினும்
இளைதா நிலைசெக வெங்கள்பிரானருட்டே னெழுமே.

---

பதினாலும், **தத்பூரணாத்** - அந்த ப்ராயஶ்சித்தங்களைப் பூர்த்தி செய்வதினாலும், **ஸர்வே** - எல்லா, **அபராதா:** - அபராதங்களும், **பாதஶ:** - (ஒவ்வொன்றினாலும்) கால் கால்பாகமாக, **நஶ்யந்தி** - நாசமடைகின்றன. அபராதங்களுக்குத் தக்கபடி ப்ராயஶ்சித்தங்கள் செய்யவேண்டுமென்று ஶாஸ்திரங்களில் விதித்திருக்க எல்லா அபராதங்களுக்கும் ப்ரபத்தி ஒன்றே பரிஹாரமாகுமோ என்ன வருளிச் செய்கிறார்—'**பூர்வஸ்மிந்**' என்றாரம்பித்து. **பூர்வஸ்மிந் வா** - முன் கல்பத்திலும், **பரஸ்மிந் கல்பே வா** - அதற்கு அடுத்த பின் கல்பத்திலும், **நிர்விண்ணசேதஸாம்** - ஸம்ஸாரத்தில் நிர்வேதத்தையடைந்தமனதையுடையவர்களுக்கு, **நிவர்த்யார்த்தவ்யத்யாஸே** - நிவர்த்திசெய்யக் கூடிய பாபத்தில் வ்யத்யாஸமிருந்த போதிலும், அதாவது ஒரு கல்பத்தில் செய்த பாபமாகிறவ்யத்யாஸமிருந்தபோதிலும், **ப்ரபத்தி:** - ப்ரபத்தியானது, **நவிஶிஷ்யதே** - வ்யத்யாஸப்படுகிறதில்லை. **ஏவமேவ**-இப்படியே, **லகூநாம்**-அல்பமான, **ஆகஸாம்** - அபராதங்களுக்கும், **குரூணாமபி**-குருவான அபராதங்களுக்கும்; **ஸக்ருத்** - ஒரு தடவை செய்யப்படுகிற ப்ரபத்திதானே, **ஸத்ய:** - அப்பொழுதுதானே. **ப்ராயஶ்சித்தகாரணம்**-(எல்லாப் பாபங்களும்) நிவ்ருத்தியடைவதற்குக் காரணம், அதாவது ஸர்வ பாபங்களையும் நிவர்த்திக்கக் கூடிய தாகையினாலே எல்லாவற்றையும் இதுவே போக்கடிக்கிறது என்று தாத்பர்யம்.

ப்ரபத்தியைத் தவிர மற்ற ப்ராயச்சித்தங்கள் இப்படிப் பாபாரம்பக பாபங்களைப் போக்காது என்றருளிச் செய்கிறார்—‘ உளதான ’ என்றாரம்பித்து.

[ப-ரை] உளதான - அநாதி ஜன்மங்களில் செய்யப்பட்டதாகையினாலே இதற்குமுன்னே இருக்கிற, வல்-த்ருடங்களான. அதாவது பக்தி போகத்தினாலும் நாசம் செய்ய முடியாததான, வினைக்கு-பாபங்களுக்கு, அதாவது பாபாரம்பக பாபங்களுக்கு என்றபடி, உள்ளம்-மனது, வெருவி-பயந்து, இது ப்ரபத்திக்கு அதிகாரமான சோகத்திற்கும் உபலக்ஷணம். உலகளந்த - லோகங்களையெல்லாம் த்ரிவிக்ரமாவதாரத்தில் அளந்ததாய், வளர் - வளர்ந்ததான, லோகங்களை யளப்பதற்காக வாமன தசையில் சிறியதாயிருந்த திருவடிகள் வளர்ந்தபடி தெரிவிக்கப்படுகிறது, தாமரை இணை-திருவடிகள் இரண்டையும். அதாவது தாமரைப் புஷ்பங்கள் போன்ற திருவடிகளையே இங்கே தாமரைப்புஷ்பங்களாக அருளிச்செய்யப்பட்டிருக்கிறது, வன்-த்ருடமான, சரண்-சரணமாக, வரித்தவர்தாம் - ப்ரார்த்தித்துப் பரந்யாஸம் செய்தவர்கள், களைதானென்ன - (இங்கே செய்கிற கைங்கர்யமாகிற புருஷார்த்தத்துக்கு நாசகங்களான) களை என்று சொல்லும்படி, எழும் - வ்ருத்தியடைகிற, கன்மம - புத்தி பூர்வோத்தராகத்தை, துறப்பர் - விட்டுவிடுவார்கள். ‘ உளதான வல்வினைக்கு ’ இத்யாதிக்கு பாபாரம்பக பாபங்களுக்குப் பயந்து ப்ரபத்தி பண்ணினவர்கள் உத்தர கைங்கர்ய விரோதியான புத்தி பூர்வோத்தராகங்களைச் செய்ய மாட்டார்கள் என்றும், அப்படி ப்ரார்த்திக்காமல் பொதுவாக ப்ரபத்தி பண்ணினவர்கள் உத்தராகத்தை ப்ராயச்சித்தாதிகளாலே பரிஹரித்துக் கொள்ளுவார்கள் என்றும் தாத்பர்யம், துஞ்சிலும் - அப்படி உத்தராகத்துக்கு ப்ராயச்சித்தம் செய்யாவிடில், இளைதாம் - இளையதான, அதாவது மந்தபுத்தியாயிருக்கிற, தீதை - [illegible], செக - [illegible]படி. அதாவது அபராதம் செய்தபோதும் இருக்க அவிவேகத்தினை [illegible]படி, எங்கள் பிரான் - எங்களுக்கு உபகாரகனுடைய, ‘ எங்கள் ’ என்பது ப்ரபன்னர்கள் எல்லோரையும் குறிக்கிறது அதாவது எல்லோருடைய ப்ரபன்ன ஸாதனத்தில் உள்ளவர்களை என்றபடி, அருள் - க்ருபையாகிற, தேன். ‘ தேன் ’ என்பதினால் ஸ்வயம் ப்ரயோஜனம் என்பதும் அதிக்ரம நிவ்ருத்தி செய்யத்

ப்ராரப்³தேதர பூர்வபாபமகி²லம்
ப்ராமாதி³கம் சோத்தரம்
ந்யாஸேந க்ஷபயந்நப்யுபக³த
ப்ராரப்³த⁴ ஸம்ஜ்ஞம் ந: ।
தீ⁴பூர்வோத்தரபாபமத்ர ஸுஜநாந்
ஜ்ஞாதே விதந்நிஷ்க்ருதை:
கௌடில்யே ஸதி ஶிக்ஷயாப்யநக⁴யந்
ஶுத்³தீ⁴கரோதி ஹரி: ॥

இதி ஶ்ரீகவிதார்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஶ்ரீமத்³வேங்கடநாத²ஸ்ய வேதா³ந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஶ்ரீமத்³ரஹஸ்யத்ரயஸாரே
அபராத⁴பரிஹாராதி⁴காரோ ஏகவிம்ஶ:.

॥ ஶ்ரீமதே நிக³மாந்த மஹாதே³ஶிகாய நம: ।

*சீரார் தூப்புற்றிருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணம்.*

---

கூடிய தென்பதும் த்யோதிதம், எழும் - வ்ருத்தி யடையும், ப்ரபத்தி வஶீக்ருதனான பகவானுடைய ஸஹஜகாருண்யம் நடுவில் அபசாரங்களாலே தடுக்கப்பட்டிருந்தது, இப்பொழுதொரு தடங்கலுமில்லாமல் முன்போல் ப்ரஸரிக்குமென்றபடி.

ஶ்ரிய:பதி ஸ்வதந்த்ரனாயிருந்தபோதிலும் ப்ரபன்னர்களைப் புத்தி பூர்வோத்தராகங்களைக் கண்டு கைவிடான் என்றருளிச் செய்கிறார்—'**ப்ராரப்³த**' என்றாரம்பித்து.

ப-ரை] **ஹரி:** - ஸர்வ ஶக்தனான பகவான், **ந:** - நம்முடைய, **அகி²லம்** - எல்லா, **ப்ராரப்³தேதரபூர்வபாபம்** - (ப்ரபத்திக்கு முன்னால் செய்யப்பட்ட) ப்ராரப்த பாபங்களைத் தவிர மற்றெல்லாப் பாபங்களையும், **உத்தரம்** - ப்ரபத்திக்குப் பிறகு செய்யப்படுகிற, **ப்ராமாதி³கம்** - புத்தி பூர்வகமில்லாத பாபத்தையும், '**ச**' என்பதினால் தேஶகாலாதி வைகுண்யத்தினால் உண்டாகும் புத்தி பூர்வக

பாபமும் சேர்த்துக் கொள்ளப்படுகிறது, **𑌅𑌨𑌭𑍍𑌯𑍁𑌪𑌗𑌤𑌪𑍍𑌰𑌾𑌰𑌬𑍍𑌧𑌾𑌂𑌶𑌂** - நம்மால் ஒப்புக்கொள்ளப்படாதப்ராரப்தத்தின் ஒரு பாகத்தையும், **𑌪𑍍𑌰𑌪𑌤𑍍𑌤𑍍𑌯𑍈𑌵** - ப்ரபத்தியினாலேயே, **𑌕𑍍𑌷𑌪𑌯𑌨𑍍** - போக்கடித்துக்கொண்டு, **𑌧𑍀𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌤𑍍𑌤𑌰𑌾𑌘𑌾𑌨𑌾𑌂** - புத்தி பூர்வகமான உத்தராகங்களின், **𑌅𑌜𑌨𑌨𑌾𑌤𑍍** - உண்டாகாமையினாலும், **𑌜𑌾𑌤𑍇𑌽𑌪𑌿** - உண்டான போதிலும், **𑌤𑌨𑍍𑌨𑌿𑌷𑍍𑌕𑍃𑌤𑍇𑌃** - அவைகளுக்கு ப்ராயஶ்சித்தம் செய்வதினாலும், **𑌕𑍍𑌰𑍌𑌰𑍍𑌯𑍇** - க்ரூரமான ஸ்வபாவம், **𑌸𑌤𑌿** - இருந்ததேயாகில், அதாவது ப்ராயஶ்சித்தத்தில் ப்ரவ்ருத்திக்காதபடியான கடின ஸ்வபாவம் இருந்ததேயானால், **𑌶𑌿𑌕𑍍𑌷𑌯𑌾𑌪𑌿** - (லகு) ஶிக்ஷையினாலும், **𑌅𑌨𑌪𑌾𑌯𑌨𑍍** - தோஷமில்லாதவனைச் செய்து கொண்டு, **𑌸𑍍𑌵𑍀𑌕𑌰𑍋𑌤𑌿** - அங்கீகரிக்கிறான்.

திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான் பகவத்விஷயம்
ஸ்ரீ உப. வே. நரஸிம்மாசார்ய ஸ்வாமிகளினால்
செய்யப்பட்ட
ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார வ்யாக்யானத்தில்
அபராதபரிஹாராதிகாரம்
முற்றிற்று.



॥ 𑌶𑍍𑌰𑍀𑌃 ॥

॥ 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤 𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃

# ஸ்தாந விஶேஷாதிகாரம்.

---

[ வர்ணாஶ்ரம தர்மங்கள் நடக்குமிடம் வாஸஸ்தானம்—பாகவதர்கள் வஸிக்குமிடம் வாஸஸ்தானம்—ஆசார்யர்கள் பூஜிக்கப்படுமிடம் வாஸஸ்தானம்—கத்யத்தில் ஸ்ரீரங்கத்தை மாத்திரம் குறித்திருப்பதற்கு காரணம்—பகவத் க்ஷேத்திரத்தின் மஹிமை—பாகவதர்கள் வஸிக்குமிடமே புண்ய க்ஷேத்ரம். ]

𑌯𑌤𑍍𑌰𑍈𑌕𑌾𑌗𑍍𑌰𑍍𑌯𑌂 𑌭𑌵𑌤𑌿 𑌭𑌗𑌵𑌤𑍍
𑌪𑌾𑌦𑌸𑍇𑌵𑌾𑌵𑌧𑌾𑌨𑍇
𑌯𑌨𑍍𑌨𑍈𑌕𑌾𑌗𑍍𑌰𑍍𑌯𑌵𑍍𑌯𑌵𑌹𑌿𑌤𑌧𑌿𑌯𑍋
𑌯𑌸𑍍𑌯𑌕𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌨𑌾𑌶𑌃 ।
𑌵𑌾𑌸𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌤𑌦𑌿𑌹 𑌕𑍃𑌤𑌿𑌨𑌾𑌂
𑌭𑌾𑌤𑌿 𑌵𑍈𑌕𑍁𑌣𑍍𑌠𑌕𑌲𑍍𑌪𑌂
𑌪𑍍𑌰𑌾𑌯𑍋𑌦𑍇𑌶𑌾 𑌮𑍁𑌨𑌿𑌭𑌿𑌰𑍍𑌭𑌾𑌷𑌿𑌤𑌾𑌃
𑌪𑍍𑌰𑌾𑌯𑌿𑌕𑌤𑍍𑌵𑌾𑌵𑌦𑍍𑌧𑌾𑌃 ॥

---

॥ 𑌶𑍍𑌰𑍀𑌃 ॥

॥ 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌶𑍍𑌰𑍀 𑌨𑌿𑌵𑌾𑌸𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜 𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥

இந்தக் கலியுகத்தில் தேஶகால வைகுண்யங்கள் அவஶ்யம் நேரிடுமாகையினால் அவைகளினால் உண்டாகும் புத்தி பூர்வோத்தராகம் இவனிடத்தில் லேபியாதாகையினாலும், புந: ப்ரபதனத்தை விதிக்கிற ஶாஸ்திரம் வ்யர்த்தமாகுமே என்கிற ஶங்கையைப் பரிஹரிக்கத் திருவுள்ளம்பற்றி அதிகாரார்த்தத்தை ஸங்க்ரஹித் தருளுகிறார்— ' **𑌯𑌤𑍍𑌰𑍈𑌕𑌾𑌗𑍍𑌰𑍍𑌯𑌂** ' என்றாரம்பித்து.

ப - ரை] **𑌭𑌗𑌵𑌤𑍍𑌪𑌾𑌦𑌸𑍇𑌵𑌾𑌵𑌧𑌾𑌨𑍇** - பகவானுடைய திருவடிகளை ஸேவிப்பது, ஆராதனம் செய்வது; முதலிய கைங்கர்யங்களுக்கு, **𑌯𑌤𑍍𑌰** - எந்த க்ஷேத்திரத்தில், **𑌐𑌕𑌾𑌗𑍍𑌰𑍍𑌯𑌂** - ஸாவதானமாயிருக்கை, **𑌭𑌵𑌤𑌿** - உண்டாகிறதோ,

இருந்த நாளிப்படி **ஸ்வயம்ப்ரயோஜநமாக நிரவத்யமாய ஸநாதநவ்ருத்தியிலே ருசியும் ஸம்பத்து**முடையவனாய், 1 '**ஏகாந்த்யவ்யவஸிததியோ**

---

**யத்ர** - எந்த க்ஷேத்ரத்தில், **ஏகாந்த்யவ்யவஸிததிய:** - பரமைகாந்திதர்மத்தில் நிச்சயத்தோடுகூடின புத்தியையுடைய, **யஸ்ய கஸ்யாபி** - யாராவது ஒருவனுடைய, **லாப:** - கிடைப்பது (உண்டாகிறதோ), அதாவது ஜாத்யாதி நியமங்களில்லை, திருக்கச்சி நம்பி போல்வாருண்டாகில் அமையும் என்று தாத்பர்யம், தனித்தனியாக '**யத்ர**' என்றருளிச் செய்திருப்பதினால் இரண்டும் சேர்ந்து கிடைக்காவிட்டால் ஒன்றாமே அமையும் என்பது த்யோதிதம், **தத்**- அப்படிப்பட்ட இடம், **க்ருதிநாம்**- க்ருதக்ருத்யர்களான ப்ரபன்னர்களுக்கு, **இஹ** - இந்தப் பூலோகத்தில், **வைகுண்டதுல்யம்** - வைகுண்டத்திற்கு ஸமானமான, **வாஸஸ்தாநம்** - வஸிக்கும் இடமாக, பகவத்குணானுபவ கைங்கர்ய வ்ருத்தி முகத்தாலே வைகுண்ட ஸத்ருசமென்றபடி; **பாதி** - ப்ரகாசிக்கிறது, **ருஷிபிர்பாஷிதா:** - ரிஷிகளினால் சொல்லப்பட்ட, **பூயாம்ஸோ தேசா:** - அநேகமான புண்ய க்ஷேத்ரங்கள், **பூயிஷ்டபோக்யா:** - பெரும்பாலும் போக்யதையை யுடையவைகள்; அதாவது கீழ்ச் சொல்லிய ஸேவார்ச்சனாதிகளைச் செய்வதற்கு போக்யதையுடையவைகளாக, அநேகமாய் இருக்கும் என்று தாத்பர்யம். இத்தால் ரிஷிகள் அந்தக்காலத்தில் ஸித்தமாயிருந்ததைக் குறித்துச் சொன்னார்கள் என்பது த்யோதிதம்.

'**இருந்த நாள்**' என்பதினால் க்ருதக்ருத்யாதிகாரம், ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரம் இவைகளின் அர்த்தமும், 'இப்படி' என்பதினால் சாஸ்த்ரீய நியமநாதிகாரார்த்தமும், '**ஸ்வயம்ப்ரயோஜநமாக**' என்பதினால் உத்தரக்ருத்யாதிகாரார்த்தமும், '**நிரவத்யமாய**' இந்பாதியினால் அபராத பரிஹாராதிகாரார்த்தமும், '**ஸநாதநவ்ருத்தி**' என்பதினால் புருஷார்த்த காஷ்டாதிகாரார்த்தமும் அனுவதிக்கப்பட்டதாகிறது. **ருசி** - ஆசை, **ஸம்பத்** - அது கிடைக்காவிடில் அது கிடைக்கும்படி

1 விஷ்-ஸ.

ரௌவ ஹாஉ கூஷாழிஹி: । விஷ்ணுநா வ்யவ ஜெஷ்டவ்யஸ்ய ஸவஉம் ஸனைவஹி॥ ' என்னும் படியாயிருக்கிற வாஜெகாதிக்கு வ்ருத்திக்கா ரணமாக வாஸஸ்தான விஶேஷமேதென்னில்:— ஆர்யாவர்த்தாதி வர்ணாஶ்ரமங்கள் யதாவஸ்தானத் தாலே யிப்போது வ்யாகூலங்க ளானபடியாலே

**வர்ணாஶ்ரம தர்மங்கள் நடக்குமிடம் வாஸஸ்தானம்.**

ஸாதுவர்ணாஶ்ரமம் ஆஜ்ஞிதமான விடத்திலே வஸி ப்பா னென்கிறதுவே யிப்போதைக் குவாஜெயம். அவ்விடங்கள் தன்னிலும் 1 ‘ கருந்தடமுகில் வண்

**பாகவதர்கள் வஸிக்குமிடம் வாஸஸ்தானம்.**

ணனைக் கடைக்கண்டு கை தொழும் பத்தர்களிருந் தவூரிலிருக்கு மானிடரெத்தவங்கள் செய்தார்கொ லோ ' என்கிறபடியே ஸாமவதொத்தமான ஜெஶம்

---

யான உபாயத்தில் த்வரைப்படுதல். ஸகாஜீ - பரமைகாந்தி, ஹாஉகூஷாழிஹி: - ஊர், வம்ஶம், முதலியவைகளினால், நவ்ய வஜெஷ்டவ்ய: - சொல்லிக்கொள்ளத்தக்கவனல்ல, விஷ்ணுநா- பகவானால், அதாவது அவனைக்கொண்டு, வ்யவஜெஷ்டவ்ய: தஸ்ய - அவனுக்கு, ஹி - எந்தக் காரணத்தினால், ஸவஉம்-எல் லாம், ஸஸவ-அந்தப் பகவானேயோ. இத்தால் ப்ரஸித்தமான க்ஷேத்திரங்களிலேயே வஸிக்க வேண்டுமென்கிற நியமம் இவன் விஷயத்தில் அநபேக்ஷிதம் என்றுக்ஷேபம் ஸூசிப்பிக்கப்பட் டது. ‘ ஆர்யாவர்த்த ’மாவது ஹிமவத்பர்வதத்திற்கும் விந்த்ய பர்வதத்திற்கும் மத்யத்திலுள்ள தேஶம். வ்யாகூலங்களானபடி யாலே- வர்ணாஶ்ரம தர்மங்கள் கலந்திருக்கிறபடியினாலே. என் கிறதே - என்று ஶாஸ்திரங்களில் சொல்லி யிருக்கிறதே, கரும்- கறுத்த, தட - விஶாலமான, முகில்வண்ணனை - மேகத்தைப் போன்ற வர்ணத்தையுடைய பகவானை, கடைக்கண்டு - தூரத் திலேயே பார்த்து, அன்றிக்கே கடைக்கொண்டு—கடை - கட கம், ரக்ஷகன் என்றபடி, ரக்ஷகனாக ஆஶ்ரயித்து, கைதொழும் - ஸேவிக்கிற, பத்தர்கள், இருந்த ஊரில் இருக்கும் மானிடர் எத் தவம் (ஜந்மாந்தரத்தில்) செய்தார்களோ. ஸாமவதொத்தமான-

---

1. பெரி-தி-4-4-7.

முமுக்ஷுவுக்கு ஸாதநம். 1 'கலௌ ஜகத்பதிம் விஷ்ணும் ஸர்வஸ்ரஷ்டாரமீஶ்வரம் | நார்ச்சயிஷ்யந்தி மைத்ரேய பாஷண்டோபஹதா ஜநா: ||' என்னச்செய்தே 2 'கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணா: | க்வசித்க்வசிந்மஹாபாக த்ரமிடேஷு ச பூரிஶ: || தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ | காவேரீ ச மஹாபாகா ப்ரதீசீ ச மஹாநதீ || யே பிபந்தி ஜலம் தாஸாம் மநுஜா மநுஜேஶ்வர | ப்ராயோ பக்தா பகவதி வாஸுதேவேऽமலாஶயா: ||' இத்யாதிகளிலே கலியுகத்தில் பாகவதர் வஸிக்கும் தேசவிசேஷஞ் சொல்லுகையாலே இந்த யுகத்தில் இப் ப்ரதேசங்களில் பாகவத ஸம்ருத்தமான ஸ்தலங்களே ஸாதநங்கள். திருநாராயணீயத்தில் 3 'ஏகபாதஸ்திதைஸ்ஸம்யக்த்வ

---

அனேகமான பாகவதர்கள் வஸிக்கிற. **கலௌ** - கலியுகத்தில், **ஜகத்பதிம்** - லோகங்களுக்கு ஸ்வாமியாயும், **ஸர்வஸ்ரஷ்டாரம்** - எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிப்பவனையும், **ஈஶ்வரம்** - ஈஸ்வரனையு மிருக்கிற, **விஷ்ணும்** - விஸ்ணுவை, **மைத்ரேய!**, **பாஷண்டோபஹதா ஜநா:** - பாஷண்டர்களினால் கெடுக்கப்பட்ட ஜனங்கள், **நார்ச்சயிஷ்யந்தி** - ஆராதிக்கப் போகிறதில்லை. என்னச் செய்தே-என்று சொல்லியிருக்கிற பொழுதே. **மநுஜேஶ்வர** - ஓ! ராஜாவே, **யே** - எவர்கள், **தாஸாம்** - அந்த நதிகளுடைய, **ஜலம்** - ஜலத்தை, **பிபந்தி** - குடிக்கிறார்களோ (அவர்கள்), **அமலாஶயா:** - நிர்மலமான மனதை யுடையவர்களாய், **பகவதி** - பகவானிடத்தில், **ப்ராயோ பக்தா:** - பெரும்பாலும் பக்தர்களாகிறார்கள். மஹர்ஷிகளால் சொல்லப்பட்ட தேசவிசேஷங்களைவிட்டு பாகவதாபிமதமான தேசவிசேஷத்தை அருளிச் செய்திருப்பதற்குக் காரணம் அருளிச்செய்கிறார்—'திரு **நாராயணீயத்தில்**' என்றாரம்பித்து. மஹா பாரதத்தில் சாந்தி பர்வத்தில் மோக்ஷதர்மத்தில் பதரிகாஸ்ரம நாராயணன் ரிஷிகளுக்கு உபதேசஞ்செய்த பாகத்திற்கு '**திருநாராயணீயம்**' என்கிற பேர். **ஏகபாதஸ்திதை** - ஒரு காலில் நிற்

1 வி-பு-6-1-50. 2 38-ம் பக்கம் பார்க்க. 3 பா-ஶா-349-55.

ஶாஶ்நி। கலிம்வஸ்தவ்ய ஶஸ்மாபி ஶங்கவஸ்வரைவ ந:॥' என்று தேவர்களும் ரிஷிகளும் விண்ணப்பம் செ

ஆசார்யர்கள் பூஜிக்கப்படும் ஸ்தானம் வாஸஸ்தானம். 1 'ஶுரவோ யத்ர பூஜ்யந்தே ஸாத்யாசார்யதா ஶாந்தா:। வஸ்தவ்யம் தத்ர யுஷ்மாபி யத்ர தர்மோ நஹீயதே ॥ யத்ர வேதாஸ்ச யஜ்ஞாஸ்ச தபஸ்ஸத்யம் தமஸ்ததா। ஹிம்ஸா ச தர்மஸம்யுக்தா ப்ரசரேயுஸ் ஸுரோத்தமா: ॥ ஸ தேஶோ வஸ்ஸ வஸ்தவ்யோ மா வோ(அ)தர்ம: பதா ஸ்ப்ருஶேத்॥' என்று ஹ்ஹவா னருளிச் செய்தான். அவ்விடங்கள் தன்னில் உகந்தருளின திவ்யதேசங்களிலே தனக்குக் கைங்கர்யத்துக்கு ஸௌகர்யமுள்ள விடத்திலே நிரந்தரவாஸம் பண்ண

கிற, தர்ம - தர்மமானது, யத்ர க்வசந - ஏதாவது ஓரிடத்தில், ஶாம்யதி - போக யத்தனம் செய்துகொண்டிருக்கும்பொழுது, கலியுகத்தில் என்றபடி, அஸ்மாபி: - எங்களால், க்வ - எப்படி, வஸ்தவ்யம் - வஸிக்கத்தக்கது, ஹ்ஹவந், தத் - அதை, ந: - எங்களுக்கு, வதஸ்வ - சொல்லும். ஸாத்யாசார்யதா: - நல்ல அனுஷ்டானத்தை யுடையவர்களாயும், ஶாந்தா: - ஶாந்தியோடு கூடினவர்களாயுமிருக்கிற, ஶுரவ: - ஆசார்யர்கள், யத்ர - எங்கு, பூஜ்யந்தே - பூஜிக்கப்படுகிறார்களோ, தத்ர - அவ்விடத்தில், யுஷ்மாபி: - உங்களால், வஸ்தவ்யம் - வஸிக்கத்தக்கது, யத்ர - எவ்விடத்தில், தர்ம: - தர்மம், நஹீயதே - குறையவில்லையோ, யத்ர, வேதாஸ்ச யஜ்ஞாஸ்ச தப: - வேதங்களும், யஜ்ஞங்களும், தபஸ்ஸும், ஸத்யம் - ஸத்யமும், தம: - இந்திரிய ஜயமும், தர்மஸம்யுக்தா - தர்மத்தோடு சேர்ந்ததான, ஹிம்ஸா - ஹிம்ஸையும், ஜ்யோதிஷ்டோமாதியாகங்களும் என்றபடி, ப்ரசரேயு:- ஸஞ்சரிக்கின்றனவோ, ஸுரோத்தமா:- ஓ! தேவஶ்ரேஷ்டர்களே, ஸ:- அந்தத் தேஶம், வ: - உங்களுக்கு, வஸ்தவ்ய: - வஸிக்கத்தக்கது, வ: - உங்களை, அதர்ம: - அதர்மமானது, பதா - காலால், ஸ்ப்ருஶேத் - தொடாது. இப்படியாகில் ஸ்ரீரங்கத்தைத் தனித்து

1 பார-ஶா-349-86, 87, 88.

வுசிதம். இத்தை 1 'யாவச்சரீரபாதமத்ரைவ ஸ்ரீரங்கே
கத்யத்தில்ஸ்ரீரங்கத்தைமாத்திரம் குறித்திருப்பதற்கு காரணம்.
ஸுகமாஸ்வ' என்று ஸகலா ஸ்தானங்களான பகவத் க்ஷேத்ரங்களுக்கு உபலக்ஷணமாகவருளிச் செய்தார்.

பகவத் க்ஷேத்ரங்களே விவேகிக்கு வாஸஸ்தாநமெ ன்னுமிடத்தை 2 'யத்ர நாராயணோ தேவ: பராத்மா
பகவத்க்ஷேத்திரத்தின் மஹிமை.
ஸநாதந: । தத்புண்யம் தத்பரம் ப்ரஹ்ம தத்தீர்த்தம் தத்தபோவநம் ॥ தத்ர தேவ ர்ஷயஸ்ஸித்தா ஸர்வே சைவ தபோதநா:॥' என்று ஆரண்ய பர்வத்தில் தீர்த்த யாத்ரையிலும், 3 'கோ லங்க: பர்வதோ ராஜந் ஸுமஹாந் ஸர்வதாதுமாந் । பஸதே பகவாந் யத்ர ஸ்ரீமாந் கமலலோசந: ॥ கோலக்ஷிதிஸம்ஸ்தேதி நித்யம் ஆநந்தாய

கத்யத்தில் அருளிச்செய்திருப்பதற்குக் காரணம் நிரூபித்தருளு கிறார்—'இத்தை' என்றாரம்பித்து. யாவச்சரீரபாதம் - சரீரம் விடும்வரையில், அத்ரைவ - இவ்விடத்திலேயே, ஸ்ரீரங்கே - ஸ்ரீரங்கத்திலேயே; ஸுகம் - ஸுகமாக, ஆஸ்வ - வஸி. உபலக்ஷணமாக - எல்லாத் திவ்ய தேசங்களுக் கும் உபலக்ஷணமாக. யத்ர - எவ்விடத்தில், தேவ: - தேவனும், ஸநாதந: - அநாதியாயும்; பராத்மா - எல்லாவற்றிற்கு பரமாத்மாவுமாகிய, நாராயண:, (வஸிக்கிறாரோ), தத் - அந்த இடம், புண்யம் - பரிசுத்தமானது, தத், பரம் ப்ரஹ்ம - எல்லாவற்றையும்விட உயர்ந்தது; தத், தீர்த்தம் - புண்யதீர்த்த மம், தத், தபோவநம் - ரிஷிகள் தபஸ்ஸு பண்ணும் இடம், தத்ர - அவ்விடத்தில், தேவர்ஷய: - தேவ ரிஷிகளும், ஸித்தா: - ஸித்தர்களும், ஸர்வே - எல்லா, தபோதநா: - ரிஷிகளும் (வஸிக்கிறார்கள்). ராஜந்!, ஸுமஹாந் - மிகவும் பெரியதாகிய, ஸர்வதாதுமாந் - எல்லா தாதுக்களோடு முடைய, கோலங்க: - கோலங்கம் என்கிற பர்வதம் (இருக்கி றது), யத்ர - எந்தப் பர்வதத்தில், ஸ்ரீமாந் - லக்ஷ்மியோடு கூடினவராயும், கமலலோசந: - தாமரைப் பூக்கள் போன்ற

1. கத்[illegible]. 2 பா-ஆ-88-27-28. 3. பா-பீஷ்-12-8,9.

ணோஹரி:॥' என்று ஹேமாக்ஷரத்திலும் உஹஷி-யருளிச்செய்தான். ஸ்ரீ வால்மீகி பகவானாலும் 1 'ஸ ஹமஹ்ஷிகூடோஸள கிரிராஜோபமோ கிரி:। யஸ்மிந் வஸதி காகுத்ஸ்த: குபேர இவ நந்தநே॥' என்கிற விடத்திலும் ஹமவஷயிஷித க்ஷேத்ரத்தினுடைய ஸகலஜநஸேவ்யத்வ மஹத்வத்தாலே ஸூசிக்கப்பட்டது. ஸ்ரீ ஸாத்வதாதிகளிலும் ஸ்வயம்வ்யக்த ஸைத்த வைஷ்ணவங்களென்கிற க்ஷேத்ர விசேஷங்களையும் அவற்றினெல்லைகளிலேற்றச் சுருக்கங்களையும் பிரியச் சொல்லி 2 'உஷ்டம் சித்தவாஸ்தம் நராணாம் யத்

கண்களையுடையவராயும், ஹேஹா: - யஜமானனுயும், ஹரி: - பாபங்களைப்போக்குபவராயுமிருக்கிற,ஹமவாநு நாராயண:- பகவானுகிய நாராயணன், மோக்ஷிபி: - மோக்ஷத்தை இச்சிப்பவர்களால், ஸம்ஸ்துத: - ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவராய், நித்யம் - எப்பொழுதும், வஸதே - வஸிக்கிறாரோ, உஹஷி - வ்யாஸர். யஸ்மிந் - எந்தப்பர்வதத்தில், காகுத்ஸ்த: - ஸ்ரீராமன், குபேர: நந்தநே இவ -குபேரன் இந்திரனுடைய நந்தன வனத்தில்போலே, வஸதி - வஸிக்கிறாரோ. அஸள - இந்த, கிரிராஜோபம: - ஹிமவத் பர்வதத்திற்கு ஸமமான, சித்ரகூட: கிரி: - சித்திரக்கூடமென்கிற மலை, ஸாஹம: - விசேஷ மஹிமையையுடையது. ஸகலஜநஸேவ்யத்வே - எல்லோராலும் அடையக்கூடியதாயிருக்கை. இங்கு ஸ்ரீராமக்ருஷ்ணுத்யவதாரங்களில் வஸித்த இடத்தைச் சொல்லியிருப்பதினால் அர்ச்சாரூபியாய் எழுந்தருளியிருக்கும் இடம் வாஸஸ்தானம் என்பதற்கு பரமாணம் அருளிச்செய்கிறார்—'ஸ்ரீ ஸாத்வதாதி' என்றாரம்பித்து. ஸ்வயம்வ்யக்தம் - பகவான் தானே ஆவிர்பவித்த ஸ்ரீரங்கம் முதலியது. ஸைத்தம் - ஸித்தர்களினால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட புராண ஸ்தலங்கள். வைஷ்ணவம் - பக்தர்களினுல் ப்ரதிஷ்டை செய்யப்பட்டது. யத் - எந்த, நராணாம் - மனிதர்களுடைய, சித்தம் - மனது, உஷ்டிதயவாஸ்த -

1. ராமா-அயோ-78-12. 2. ஸ்ரீஸாத்-ஸ-7-120.

**ல்பிஷைராவ்ருதம் | தத்க்ஷணாத் ஸம்ஶுத்திம் யாதி நாராயணாஶ்ரயே ||'** என்றவ்வோ க்ஷேத்ரங்களி லெல்லைக்குள்ளே வஸித்தவனுக்கு தேஹந்யாஸ காலத்திலே வரும் விஶேஷமுஞ் சொல்லப்பட்டது. ஆகையால் 1 '**யத்கிஞ்சிதபி குர்வாணோ விஷ்ணோராயதநே வஸேத் | ந கிஞ்சிதபி குர்வாணோ விஷ்ணோராயதநே வஸேத் ||**' என்கிறபடியே ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளாலே வல்ல கைங்கர்யத்தைப் பண்ணிக்கொண்டு ஸர்வ ஸ்வாவதாரோசித விஷயமான ஸர்வேஶ்வர க்ஷேத்ரத்

---

தோஷத்தோடு கூடிய இந்திரியங்களுக்கு வஶப்பட்டிருப்பதினால், **கில்பிஷை:** - பாபங்களினால், **ஆவ்ருதம்** - மூடப்பட்டிருக்கிறதோ, **தத்** - அது; **நாராயணாஶ்ரயே** - பகவானுடைய க்ஷேத்ரத்தில், **தத்க்ஷணாத்** - மரணமடையும் ஸமயம் (கிடைத்ததேயானால்), **ஸம்ஶுத்திம்**-பரிஶுத்தியை, **யாதி**-அடைகிறது. **ந்யாஸகாலம்** - விடுங்காலம். **விஶேஷம்** - பரிஶுத்தி, அந்திமஸ்ம்ருதி முதலியது. பகவத் க்ஷேத்ரவாஸம் இப்படிப்பட்ட அதிஶயத்திற்குக் காரணமாகில் பகவான் முதலியவர்களுக்கு விரோதம் செய்வதற்காக அங்கு வஸிக்குமவர்களுக்கும் இந்த பரிஶுத்தி ஸம்பவிக்குமோ என்னில்? அருளிச் செய்கிறார்— 'ஆகையால்' என்றாரம்பித்து. **யத்கிஞ்சிதபி** - தன்னால் செய்யக்கூடிய எதாவதொரு கைங்கர்யத்தை, **குர்வாண:** - செய்துகொண்டு, **விஷ்ணோ:** - பகவானுடைய, **ஆயதநே** - கோயிலில், க்ஷேத்ரத்தில் என்றபடி, **வஸேத்** - வஸித்துக்கொண்டிருப், (அதற்கு ஶக்தி இல்லையாகில்) **கிஞ்சிதபி** - ஒருவித அபசாரத்தையும், **ந குர்வாண:** - செய்யாதவனைக் கொண்டு, **விஷ்ணோ: ஆயதநே வஸேத்**. '**ப்ரவ்ருத்தி**' யாவது கைங்கர்யங்களில், '**நிவ்ருத்தி**' யாவது அபசாரங்களில். பாகவதர்கள் அபிமானித்த பகவத் க்ஷேத்ரமே உசிதமான வாஸஸ்தானமென்று நிஷ்கர்ஷம் செய்திருப்பது பல வசனங்களில் எந்த இடங்களிலும் பாகவதர்கள் வஸிக்கலாம் என்று சொல்லியிருப்பதுடன் விரோதிக்குமே என்னில்? அதற்கு ஸமாதானம் அருளிச்

---

1

திலே வஸிக்கை யுசிதம். 1 ‘நிக்ருஹீதேந்த்ரியக்ராமோ யத்ர யத்ர வஸேந்நர: | தத்ர தத்ர குருக்ஷேத்ரம் நைமிஶம் புஷ்கரம் ததா ||’ என்று சொல்லுகிறவிது ஸத்த்வோத்தரமில்லாதபோது ஏதேனுமொரு தேஶத்திலே வஸித்தாலு மிவன் வாஸத்தாலே அத்தேஶமும் புண்ய மென்கைக்காக. இதுக்கு ஶாண்டிலீ வ்ருத்தாந்தமுதாஹரணமாகக்கண்டுகொள்வது. ஆகையால் 2 ‘ஜ்ஞாநஸமகாலமுக்த்வா கைவல்யம் யாதி ஹதஶோக: | தீர்த்தே ஶ்வபசக்ருஹே வா நஷ்டஸ்ம்ருதிரபி பரித்யஜ்ய தேஹம் ||’ என்று ஶரீரபாதத்துக்கு மொரு தேஶவிஶேஷ நியமமில்லையென்றதுவும் எப்படிக்கும் பலத்திலிழவில்லை யென்கைக்காக.

பாகவதர்கள் வஸிக்குமிடமே புண்ய க்ஷேத்ரம்.

---

செய்கிறார்—‘நிக்ருஹீத’ என்றாரம்பித்து. **நிக்ருஹீதேந்த்ரியக்ராம:** - ஜயிக்கப்பட்ட இந்திரியங்களின் கூட்டத்தை யுடைய, **நர:** - மனிதன், **யத்ர யத்ர** - எங்கெங்கு இடத்தில், **வஸேத்** - வஸிப்பனோ, **தத்ர தத்ர** - அந்தந்த இடத்தில், **குருக்ஷேத்ரம்**, **நைமிஶம்** - நைமிஶாரண்யம், **ததா**-அப்படியே, **புஷ்கரம்**-புஷ்கரதீர்த்தம், **ஸத்த்வோத்தரமில்லாதபோது**-கீழ் நிரூபிக்கப்பட்ட குணங்களையுடைய உசிதமான வாஸஸ்தானம் கிடையாதபோது. இப்படியே மரணகாலத்திலும் தேஶநியமம் வேண்டியதில்லை என்கிற வசனத்திற்கும் கதி யருளிச் செய்கிறார்—‘ஆகையால்’ என்றாரம்பித்து. **ஜ்ஞாநஸமகாலம்**-ஜ்ஞான மிருக்கும் ஸமயத்தில், **உக்த்வா**-சொல்லி, அதாவது நீயே ஶரணமாக வேண்டுமென்று ப்ரார்த்தித்து, **தீர்த்தே** - பரிஶுத்தமான இடத்திலாவது, **ஶ்வபசக்ருஹே வா** - சண்டாளனுடைய க்ருஹத்திலேயாவது, **நஷ்டஸ்ம்ருதிரபி** - ஜ்ஞானமில்லாமலாவது; (ஜ்ஞானத்தோடு கூடினவனாகவாவது), **தேஹம்** - தேஹத்தை, **பரித்யஜ்ய**-விட்டவனைக் கொண்டு; **ஹதஶோக:** - போயிருக்கிற துக்கத்தை யுடையவனப், **கைவல்யம்** - மோக்ஷத்தை, **யாதி** - அடைகிறான். **எப்படிக்கும்** - மரணகாலத்தில் நேருகிற க்ஷேத்திரங்கள் முதலிய வ்யத்யாஸங்களினால்.

---

1 இ-ஸ-27-18. 2 வரா-பு.

ஆராதவருளமுதம் பொதிந்த கோயி
லம்புயத்தோனயோத்தி மன்னர்க்களித்தகோயில்
தோராத தனிவீரன் தொழுதகோயில்
துணையான வீடணற்குத் துணையாங்கோயில்
சேராத பயனெல்லாஞ் சேர்க்குங் கோயில்
செழுமறையின் முதலெழுத்துச்சேர்ந்தகோயில்
தீராத வினையனைத்துந் தீர்க்குங்கோயில்
திருவரங்கமெனத்திகழும் கோயில் தானே.

---

**என்கைக்காக** - பலம் விசேஷம் என்று சொல்லுவதற்காக; அல்லது வாஸஸ்தான விசேஷம் வேண்டாமென்பதில் இந்தவசனத்திற்குத் தாத்பர்யமில்லை.

• கீழருளிச் செய்தபடியே கத்யத்தில் ஸ்ரீரங்கத்தை அருளிச் செய்தது மற்ற திவ்ய தேசங்களுக் குபலக்ஷணம் என்று நிரூபிப்பதற்காக சில ப்ரதானமான திவ்ய தேசங்களை இங்கு நிரூபித்தருளக் கோலி அதில் பதின்மர் மங்களாசாஸநம் பண்ணின ஸ்ரீரங்கத்தை முதலில் அருளிச் செய்கிறார்—'ஆராதவருளமுதம்' என்றாரம்பித்து.

ப-ரை] **திருவரங்கமென** - ஸ்ரீரங்கம் என்று சொல்லும்படி, **திகழும்** - ப்ரகாசிக்கிற, 'அறிவிலாமனிசரெல்லா மரங்கமென் றழைப்பராகில் பொறியில்வாழ் நரகமெல்லாம் புல்லெழுந்தொழியுமன்றே' என்றும், '[illegible]' என்றும் சொல்லுகிறபடியே ஒப்பற்ற க்ஷேத்திரமாக ப்ரஸித்தமான, **கோயில்தானே** - பகவானுடைய வாஸஸ்தானமே, **ஆராத** - த்ருப்தி வராத, **அருள்** - க்ருபையை யுடைய, **அமுதம்** - அம்ருதம்போல போக்யமான ஸ்ரீரங்கநாதனை, **பொதிந்த** - உள்ளே வைத்துக் கொண்டிருக்கிற, **கோயில்**; **அருள் அமுதம்** - க்ருபையாகிற அம்ருதம், அதாவது க்ருபை அதிகமாயிருக்கிறபடியாலே பகவானையே அம்ருதமாக நிரூபித்திருக்கிறது. அன்றிக்கே 'அருளும் அமுதமும்' என்று சேர்த்து இவை இரண்டும் [illegible] 'அருள்' என்பதினால் [illegible]. 'அமுதம்' என்பதினால் [illegible] **அம்புயத்தோன்** - ப்ரஹ்மா, **அயோத்தி மன்னர்க்கு** - இக்ஷ்வாகுக்கு, **அளித்த** - கொடுத்த கோயில், [illegible] ஸ்ரீரங்கத்தை

விமானத்துடன் இக்ஷ்வாகுக்குக் கொடுத்த வ்ருத்தாந்தம் இங்க னுஸந்தேயம், தோராத - ஒரு இடத்திலும் அபஜயத்தை யடை யாத, தனி - 'ராமோ தநுர்ப்ருதாமஸ்மி' என்கிறபடியே தனுர்தரர் களில் ஒப்பில்லாதவனை, அன்றிக்கே அஸஹாய ஶூரனை, இதுவழி யெழுத்துக் கொடுத்ததாயிருக்கிறது. ஆனால் லோக வ்யவஹார பதம். 'தோலாத' என்பது இலக்கிய பதம். வழி யெழுத்து அவஶ்யம் இருக்க வேண்டுமென்கிற நியம மில்லையாகையினால் 'தோலாத' என்று பாடாந்தரம், வீரன்- ஸ்ரீராமன், தொழுத கோயில், 'ததஸ்த்வம் அபி தத்ரூபம் அகரோத் ப்ரணிதாநத:' 'ஸஹ பத்ந்யா விஶாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்' இத்யாதிகள் அனு ஸந்தேயம். துணையான - 'ராக்ஷஸாநாம் வதே ஸாஹ்யம் கரிஷ்யாமி யதாபலம்' என்கிறபடியே தனக்கு ஸஹாய மாகவந்த, வீடணற்கு - விபீஷணனுக்கு, துணையாம் - ரக்ஷ கமான, கோயில், 'தென்திசை இலங்கை நோக்கி' என்கிற படியே தன் கடாக்ஷத்தினால் ஸதா ரக்ஷித்துக்கொண்டிருக்கிற என்றபடி, 'விபீடணுக்கு வேறாக நல்லானை' என்பதிங் கனுஸந் தேயம், சேராத - நமக்கு துர்லபமான, அன்றிக்கே ஒன்றோடொ ன்று சேராததான, பயனெல்லாம் - புருஷார்த்தங்க ளெல்லாவற் றையும், அதாவது அர்ச்சாவதார கைங்கர்யத்தையும், நித்யமுக் தர்களின் கைங்கர்யத்தையும், சேர்க்கும் - நமக்கு ஸுலபமாகச் செய்யும், கோயில், செழு - ஶ்லாக்யமான ப்ரமாணங்களுக்குள் உத்க்ருஷ்டமானதும், பகவானுடைய ஸ்வரூபாதிகளையும் அவ னுடைய ஆராதனாதிகளையும் ப்ரதிபாதிக்கிறதுமான, மறையின்- வேதங்களின், முதலெழுத்து-ப்ரணவத்தை, சேர்ந்தகோயில், அதா வது ப்ரணவமானது பகவானுடைய ஸர்வஶேஷித்வத்தை ப்ரகா ஶம்செய்வதைப்போல இந்த ஸ்ரீ ரங்க க்ஷேத்ரமும் ப்ரகாஶம்செ ய்கிறது, 'ஶ்ரீரங்கம் ப்ரணவாகாரம் ஸாக்ஷாத் ரங்கவிமாநம் । ஶ்ருங்கம் ப்ரணவ ஆகாரம் தச்சேஷித்வம் ப்ரதீக்ஷ்யதே ॥' என்பது அனுஸந்தேயம். அன்றிக்கே 'விமாநம் ப்ரணவாகாரம்' என்கிற படியே ஆகாரத்தில் அதற்கு ஸத்ருஶமான என்றபடி. தீராத- நாஶம் செய்யமுடியாத, அன்றிக்கே ப்ரஹ்மாதிகளுக்கும் நிர்ணயிக்க அஶக்யமான 'ந ஹ்யஸ்ய ஸத்ருஶம் கிஞ்சித் தர்ஶனம் பாபிநாம் ... ந த்ரிவிக்ரமக் க்ருத: ஸம்ஸார பாஶான் ...'

**கண்ணனடியிணை யெமக்குக் காட்டும் வெற்பு**
**கடுவினைய ரிருவினையுங் கடியும் வெற்புத்**
**திண்ணமிது வீடென்னத் திகழும் வெற்பு**
**தெளிந்த பெருந்தீர்த்தங்கள் செறிந்த வெற்பு**
**புண்ணியத்தின் புகலிதென்னப் புகழும் வெற்புப்**
**பொன்னுலகில்போகமெல்லாம்புணர்க்கும்வெற்பு**
**விண்ணவரு மண்ணவரும் விரும்பும் வெற்பு**
**வேங்கடவெற்பென விளங்கும் வேதவெற்பே.**

---

என்கிறபடியே, ப்ராயஸ்சித்தாதிகளாலும் நாஶம் செய்யமுடியாத என்றாகவுமாம், **வினை யனைத்தும்** - கர்மங்கள் எல்லாவற்றையும், **தீர்க்கும்** - போக்கடிக்கும், **கோயில்**.

'**அருளமுதம்**' என்பதினால் நாராயண ஶப்தார்த்தமும், '**போதிந்த**' என்பதினால் அது உள்ளே இருப்பதென்றும், '**செழுமறையின்**' இத்யாதியால் ப்ரணவ ஸாம்யமும், '**தீராத வினை**' இத்யாதியால் நமஶ் ஶப்தார்த்தமும் அருளிச் செய்யப்பட்டிருப்பதினால் ஸ்ரீ ரங்கம் திருமந்திரத்திற்கு ஸத்ருஶம் என்றதாயிற்று.

ப - ரை] **வேங்கட வெற்பென** - திருவேங்கடமலை என்று சொல்லும்படி, **விளங்கும்** - ப்ரகாஶிக்கிற, 'வேங்கடங்கள்' இத்யாதிகளிற்படியே அந்வர்த்தமான ப்ரஸித்தியையுடைய, **வேத வெற்பே** - வேத ப்ரதிபாத்யமான மலையே. அதாவது ருக்வேதத்தில் 'கொண்டையாயிருந்தாலும், மற்ற எந்த தோஷங்களிருந்த போதிலும் மலையைக் குறித்துச் செல்லுங்கள்' என்றர்த்தமுள்ள ஸ்ருதி வாக்யத்தில் சொல்லப்பட்ட என்றபடி; **கண்ணனடியிணை** - ஸ்ரீ க்ருஷ்ணனுடைய திருவடிகளிரண்டையும், **எமக்கு** - நமக்கு, **காட்டும்** - உபாயமாகவும் உபேயமாகவும் காட்டுகிற, **வெற்பு** - மலை, அன்றிக்கே **கண்ணன்** - ஸ்ரீ க்ருஷ்ணனாகிற ஸ்ரீநிவாஸன், **அடியிணை** - தன்னுடைய திருவடிகளிரண்டையும், **எமக்கு** - அகிஞ்சனரான நமக்கு, **காட்டும்** - 'மாமேகம் ஶரணம் வ்ரஜ' என்று உபதேசித்த அர்த்தத்தை நேரில் காட்டிக்கொண்டிருக்கிற, அதாவது வரதமுத்ரையோடு கூடிய இடது திருக்கைகளின் விரல்களை கீழே திருப்பிக் காட்டிக்கொண்டிருப்பதினால் தம்முடைய திருவடிகளை ஸர்வருக்கும் காட்டிக்

கொண்டிருக்கிற இத்தால் இது சரமச்லோக துல்யம் என்பது தெரிவிக்கப்படுகிறது. **கடு** - க்ரூரமான. **வினையர்** - பாபங்களையுடையவர்களின், **இருவினையும்**-புண்ய பாபங்களாகிற இரண்டு விதமான பாபங்களையும், **கடியும்** - போக்கடிக்கிற, **வெற்பு** - **இது**, இந்த மலையே, **வீடு**-மோக்ஷம், **திண்ணம்**-நிச்சயம்; **என்ன**-என்று சொல்லும்படி, இப்படி ஸகலவித கைங்கர்யங்களையும் செய்வதற்குக்காரணமாயிருப்பதினாலல்லவோ தெழில் அருவித்திருவேங்கடத்து எழில்கொள்சோதி எந்தை தந்தை தந்தைக்கு ஒழிவில் காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலா வடிமைசெய்ய ஆழ்வார பேக்ஷித்தது, **திகழும்**-ப்ரஸித்தமான, **வெற்பு**, **தெளிந்த**-கலக்கமில்லாத, அதாவது ஶோபவஸ்யாஹ்ருதிமியைப்போலஸ்வஸ்வாஸ்வாதுஸலிலா ஸரஸ் ஸஹஸ்ரங்கள் என்றபடி, **பெரும்** - மஹாமஹிமையுடைய, **தீர்த்தங்கள்**-ஆகாஶகங்கை முதலிய தீர்த்தங்கள், **செறிந்த**-நிறைந்ததான, அன்றிக்கே நெருங்கிவர்த்திக்கிற, 'விஶாலஹதியப்ரவஹாஜாம் ஶ்ரீதஜாம்ஶாஸ்வதம். ஶ்ரீநிவாஸஸ்யாம்லைாயீ வஶ்வாஹவாஸவாஸ ॥' என்கிறபடியே குருபரம்பரைக்கு மூலகாரணம் என்பது த்யோதிதம், **வெற்பு**, **புண்ணியத்தின்**, **புகல்** - உபாயம், **என்ன**, **புகழும்** - ஸ்தோத்ரிக்கப்படும்; **வெற்பு**, அதாவது புண்யம் ஸம்பாதிப்பதற்குத் திருமலை வாஸமே அமையுமென்றபடி. 'ஊனேறு செல்வமும்,' அதன் தாத்பர்ய ஸங்க்ரஹமான 'ஹராஜாவ த்ருஹ்ருதிவிஸ்வம்வெந்க்ஷ்யவப்ரயஷ: வம் ஜநாகாக்ஷது வ்ருஷஶ்ஶிகரே ஜஶ்ஷாம் தஸ்ஷாம்வா' என்கிற ஸ்ரீ தயாஶதகஸ்லோகமும் இங்கனுஸந்தேயம். **பொன்னுலகில்** - ஸ்வர்ணம்போல் ப்ரகாஶமான பரமபதத்தில், **போகமெல்லாம்**, **புணர்க்கும்**-உண்டாக்குகிற, **வெற்பு**, தன்னிடத்தில் **வஸிக்**கிறவர்களுக்குப் பரமபதத்தில் ஸர்வ போகத்தையும் கொடுக்கக்கூடியது என்றபடி, அன்றிக்கே பரமபதத்தில் உண்டாகும் அனுபவங்களை யெல்லாம் இங்கேயே கொடுக்கக்கூடியது என்று தாத்பர்யமாகவுமாம், 'நானுருவங்கொண்டு நல்லடியோர்வாழ இன்பமிங்குறவருதி' என்பதனுஸந்தேயம். **விண்ணவரும்** - நித்யஸூரிகளும், **மண்ணவரும்** - இந்த லோகத்திலிருக்குமவர்களும், **விரும்பும்** - ஆசைப்படுகிற, **வெற்பு**, அதாவது 'வானவர் வானவர் கோனொடும் சிந்து பூமகிழும்', 'கண்ணா வானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு' என்கிறபடியே. இந்த பலபிலவிந

உத்தம வமர்த்தல மமைத்ததொ
ரெழிற்றனு வுயர்த்த கணையால்
அத்திர வரக்கன் முடிபத்து மொரு
கொத்தென வுதிர்த்த திறலோன்
மத்துறு மிகுத்த தயிர் மொய்த்த
வெணெய் வைத்தது ணு மத்தனிடமா
மத்திகிரி பத்தர் வினை தொத்தற
வறுக்கு மணி யத்திகிரியே.

---

ந்து எம்பெருமானுக்குக் கைங்கர்யம் பண்ண வேண்டுமென்றாசைப்படுகிற, '[illegible]' என்று ஸ்ரீ ஹம்ஸ ஸந்தேசத்தில் அருளிச் செய்யப்பட்டிருக்கிறது. நித்ய ஸூரிகளும் எப்பொழுதும் பகவானை அநுபவித்துக் கொண்டிருந்த போதிலும் திர்யக்குக்களும் கைங்கர்யம் செய்யும்படி நிற்கிற ஸௌலப்யாதிசயத்தை அநுபவிப்பதற்காக இந்த மலையில் வாஸம் செய்ய விரும்புகிறார்கள் என்று தாத்பர்யம்.

ஏழ் 'தோராத தனிவீரன்' இத்யாதியினால் ஸ்ரீராமாவதாரமும், '**கண்ணன்**' இத்யாதியினால் ஸ்ரீ க்ருஷ்ணாவதாரமும் தனித்தனியே வஸிக்கிற இரண்டு திவ்யதேசங்களை யருளிச் செய்து இவ்விரண்டவதாரங்களும் வஸிக்கிற ஸ்ரீ ஹஸ்திகிரியை அருளிச் செய்கிறார்—'உத்தம' என்றாரம்பித்து.

ப-ரை] உத்தம - பர்த்தமான, '**ராமராவணயோர் யுத்தம் ராமராவணயோரிவ**' என்கிறபடியே ஸத்ருசமில்லாத என்றபடி, அமர்த்தலம் - யுத்தம் செய்யுமிடத்தில், அமைத்தது - அமைந்தது என்று சொல்லிக்கொள்ளவும், போதுமானதுமான, அதாவது ஸத்ருக்களை ஸம்ஹரிக்கப் போதுமான ஸாமர்த்யத்தையுடைய, ஒரு - அத்விதீயமான, எழில் - ப்ரகாசத்தையுடைய, தனு - தனுஸ்ஸினால், அன்றிக்கே 'உத்தமவமர்த்தலம்' என்றது ருத்ரனுக்கும் பகவானுக்கும் [illegible] உண்டான யுத்த ஸ்தலத்தை, அப்பொழுது அமைத்தது - ஸாபமாக

மனதினால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட, அப்படி இருந்த போதிலும் 'ஜ்யாம் ஹித்வா தஸநூ:' என்கிறபடியே முறிந்துவிட்டபடியினாலே வைஷ்ணவதனுஸ்ஸு அத்விதீயமாய் நின்றபடி 'ஓரெழில்' என்று சொல்லப்படுகிறது. அதுவே அகஸ்த்யாஸ்ரமத்தில் தேவேந்திரனால் வைக்கப்பட்டு பகவானால் அங்கீகரிக்கப்பட்டது என்று ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 'எழி'லாவது பகவானைத்தவிர மற்றெவராலும் ஒரு வ்யாபாரமும் செய்ய முடியாமை, அப்படிப்பட்ட தனுஸ்ஸினால், உயர்த்த - உயரத் தள்ளப்பட்ட, கணையால் - பாணத்தினால், அத்திரவரக்கன் - அஸ்திர பலத்தினால் சிறந்த ராவணன், அன்றிக்கே 'அத்திற' என்று பாடமாய் அப்படிப்பட்டஸாமர்த்தியத்தை யுடையவனான, என்று தாத்பர்யமாகவுமாம், முடி பத்தும் — தலைகள் பத்தையும், ஒரு கோத்தென-ஒரு குலை என்று சொல்லும்படி, 'வானுளாரவரை வலிமையால் நலியும் மறிகடலிலங்கையர் கோனை பானுநேர் சரத்தால்பனங்கனி போலப் பருமுடிவுதிர வில்வளைத்தோன்' என்று சொல்லுகிறபடியே ஒரு கொத்திலிருக்கும் பனங்காய்களைப்போலத் தனித்தனி பாணம் ப்ரயோகம் வேண்டாமே ஒரே பாணத்தினால் அடித்துத்தள்ளின படி சொல்லப்படுகிறது, உதிர்த்த - கீழே விழும்படி செய்த, இது அநாயாஸேந செய்தபடியைக் குறிக்கிறது, திறலோன் - ஸாமர்த்தியத்தை உடையவனையும், மத்துற - மத்தினால் உறுத்தப்பட்ட, தயிர் மிகவும் உறுதியாய்த் தோய்ந்திருப்பதினால் மத்து உள்ளே செல்வதற்காக உறுத்தப்பட்ட, மிகுத்த - அதிகமான, தயிர் - தயிரில், மோய்த்த - நுரைத்துக் கிளம்பினதாகிய, வெண்ணெய், வைத்தத-உறியில் வைக்கப்பட்டதை உண்ணும்- ஸாப்பிடும், அத்தன் - ஆப்தனாகிய பகவானுடைய, 'அங்கொரு நாளாய்ப்பாடி சீரார் கலையல்குல் சீரடிச் செந்துவர்வாய் வாரார் வனமுலையாள் மத்தாரப்பற்றிக் கொண்டு ஏரார் இடைநோவ எத்தனையோ போதுமாய்ச் சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை வேரார் நுதல்மடவார் வேறோர் கலத்திட்டு நாரா ருறியேத்தி நன்கமைய வைத்ததனை போரார் வேல் கண்மடவாள் போந்தனையும் பொய்யுறக்கம் ஓராதவன் போலுறங்கி யறிவுற்றுத் தாரார்தடந்தோள்கள் உள்ளளவும்கை நீட்டி ஆராத வெண்ணெய் விழுங்கினவனாகிய ஸ்ரீ க்ருஷ்ணன்

